உ

# இடைக்காடனர்

பாடிய

# மூவடி முப்பது

மூலமும்-உரையும்.



---

இதற்கு

மதுரை

**மதுரஞ் சுந்தரபாண்டியனர்**

அவர்களால்

நூன்முகம் குறிப்புரை நூலாசிரியர் வரலாறு

ஆகியவை வரையப்பெற்று

உத்தமபாளையம்

போலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டர்

**திருவாளர் T. A. மாணிக்கம் பிள்ளை அவர்கள்**

பொருள் உதவியால்

மதுரை ராஜா பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

இதன் விலை] 1931. [அணா 8.

## Foreword.

---

Idaikkadu is the mid-jungle region between Kattu Nadu and Parambu Nadu of the far-famed Vallal-Pari, comprised under Thuvarapathi in the Pandian Kingdom, and Idaikkadar was the most renowned Siddhar of the said region. He was an intimate friend of Kapilar, the spotless anthana of Vathavur of Manickavasakar fame and they sang of Mullai (jungle) and hilly lands respectively. As a great master and manipulator of sounds and sounding letters, Idaikkadar out-witted the swaggering scholars of the last great Sangam at Madura and his reputed **Oosi-muri** is alleged to have brought about the downfall of that historical, literary coterie. Moovadi Muppathu or **"Triplets Thirty"** is said to be from the pen or rather stylus of the same sage and Bard. Thirty topics in thirty triplets presented under the four main Kooroos or sections of Inbam or pleasure, Porul or wealth, Aram or virtue and Olipu or miscellaneous are dealt

with in them in a thought-provoking manner. The first and the last sections contain each five stanzas while the two intermediary divisions count ten each. Hereunder is given a table of headings with their English Equivalents.

SECTION I INBAM OR PLEASURE.

1. Kamam or Lust.
2. Kama-kilathi or Concubine.
3. Oon-misaithal or Eating meat.
4. Poyyurri or Lying.
5. Nanamai or lack of modesty.

SECTION II PORUL OR WEALTH.

1. Kallamai or not Learning.
2. Pura-Polivu or Adumbration.
3. Viyatthal or wondering.
4. Nera-Natpu or Feigned friendship.
5. Kutram-Katal or Fault finding.
6. Nalkuravu or Indigence.
7. Kalakkam or Perturbation of mind.
8. Thookam or Sleep.
9. Pocchappu or Forgetfulness.
10. Asai or Desire.

SECTION III ARAM OR VIRTUE.

1. Thatrunai-yakkam or the benefits of self help.
2. Pini or Disease.
3. Alukai or Shedding Tears.
4. Moopu or Old age.
5. Sakkadu or Death.

SECTION IV OLIPU OR MISCELLANEOUS.

1. Thura-ara-ilipu or the Evil of Asceticism.
2. Kannaruthal or to be unkind or cruel eyed.
3. Eeyamai or Non-giving.
4. Kodumai or Cruelty.
5. Vehuli or Excessive anger.
6. Poli-Pura-Moli or Sham utterance.
7. Kan-mulai-perukkam The increase of children.
8. Kolai or Killing.
9. Soothu or gambling.
10. Kudi or Drinking.

Every one of these triplets gives the uses of an world-condemned evil or sin, demonstrating thereby that 'there is a soul of goodness in things evil, would men observingly distil it out' as Shakespeare has it. All men who look on the bright side of things evil will find much good for

reflection in this small poem. The commentary to this didactic gnonomic poetry is sufficiently clear, and where the commentator, whose name is unknown, uses language which needs elucidation, the Editor has done the needful.

Mathuram Sundara Pandiya Othuwar a good Tamil scholar and student for a long time of literary and archaeological research deserves thanks of the Tamil world for having brought to light an old gem of a classic of the Augustan age of Tamil Literature with necessary prefaces, introductions explanatory notes etc., The profound and varied scholarship of the Editor will be found reflected in his original poems on different subjects as Kudal Anthathi, grammar on Isai, Natakam, Thalangal 108 with Tamil names, Nataka Nool called Sundara pandiam discoursing on Nattiam (Ready for the press) etc.

Muneerpullam,<br>
Karpaham<br>
Nov. 21. 1930.

M. S. Purnalingam Pillai,<br>
B. A., L. T,<br>
Retired Educationist.

An Introduction given by Thiruvalar,

**A. David Massillamani M. A. (Chicago)**

Headmaster,

Kshatriya Vidhyasala High School, Virudhunagar.

on 23-11-30.

---

All those who have sturdy common sense and broad-mindedness and all those who appreciate the common weal of man will be highly thankful to Saiva Thiruvalur Mathuram Sundara Pandia Othuwar avergal for coming out to publish "Moovadi Muppathu" of Idaikkadar of the last Tamil Sangam fame with annotation and the history of the author. The book, though at the outset may appear non-religious, is highly religious and non-sectarian. All created things are controlled by an inexorale law of the creator and any futile attempt to change the inherent nature of one thing into another is the cause of all chaos in the world and so all those who wish the welfare of human society will find a useful guide in this book. It has been my fortune to be an intimate friend of

Saiva Thiruvalar Mathuram Sundara Pandia Othuwar and I always found great delight to listen to the conversation and lecture of the author. Two other useful books known as "Thalaviruthan' a grammar which helps to understand the music and drama of old Tamil authors and "Sundara-pandiam", a precious guide to Tamil drama by the same author are in print.

A. David Massillamani.

/

சென்னைச் சட்டகலாசாலைப் பேராசிரியரும்,

சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப்

பேராசிரியருமா யிருந்துவந்த, டாகூர்ச் சட்டப் பேராசிரியர்

திருவாளர்

## கா. சுப்பிரமணிய பிள்ளை

எம். ஏ. எம். எல். அட்வகேட் அவர்கள்

# சிறப்புரை.

---

கடைச்சங்கப் புலவராகிய இடைக்காடர் செய்ததாகக் கூறப்படும் 'மூவடி முப்பது' என்ற பழந்தமிழ்ச் சிறுநூலை விரிந்த முன்னுரையோடும் விளக்கத்தோடும் குறிப்புரையோடும் திருவாளர் மதுரை, மதுரஞ் சுந்தரபாண்டிய ஓதுவாரவர்கள் அச்சிட்டிருக்கின்றார்கள். செங்கோன்றரைச் செலவு முதலிய அரிய நூல்களை முதன்முதல் வெச்சியற்றிய பெருந்தகையாரும், 'தாள விருத்தம்' என்னும் இசைநாடகத் தமிழியனூலை ஆக்கிய சிறப்பினரும் நாடக நயமிக்க வியனூலர், சொற்பொழிவும் வல்ல ஏற்றமும் உடையருமாகத் திகழும் இந்நூலின் குறிப்புரை யாசிரியர், முத்தமிழ்ப் புலமையும் வாய்ந்தவர்கள். இவர்களது ஆற்றலால், இந்நூலானது ஒப்பற்ற முறையில் வெளிப்படுத்தப்படுகின்றது.

இந்நூலின்கண், இறுதியிலுள்ள ஒழிபொழிந்த ஏனைப் பகுதியுள், பொதுவாகப் பலராலுங் கடியப்படுஞ் செயல்களின் நற்பக்கம் காட்டப்பட்டிருத்தல், கற்பார்க்கு வியப்பை விளைப்பதே.

உலகில் மக்கள் தீயவற்றைக் கைக்கோடற்குக் காரணமுள வென்னு முண்மையை அது விளக்குவது.

தொல்காப்பியக் களவியலுள், முப்பொருளுள் இன்பத்தை முதற்கண் வைத்தமைபோல, இந்நூலுள்ளும் இன்பக்கூறு, முதற்கண் வைக்கப்பட்டுள்ளது. இந்நூல் நல்ல அறவுரைகளோடு முடிவதால், இதன்நோக்கம் நல்லொழுக்கமென்பது துய்த்துணரற்பாற்று. இத்தகைய பண்டை நூல்களால், நம் முன்னோரது ஆராய்ச்சித்திறனும் விரிந்த நோக்கமும் அறியக் கிடக்கின்றன என்பது புலனாவதால், யாவராலும் இது கற்றுப் பாராட்டப் படுவதற்குரியது. அச்சிற்கு இதுவரை வெளி வராத இத்தகைய நூல்களைத் தமிழ் மக்களுக்குப் பயனுறச் செய்யும் இந்நூற் குறிப்புரை யாசிரியர்க்குத் தமிழ் உலகம் நிலைத்த கடப்பாடுடையது.

திருநெல்வேலி
17—11—1930

கா. சுப்பிரமணியன்.

உ

சிவமயம்.

மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலை ஆசிரியர்

## திருவாளர். சு. நல்லசிவன் பிள்ளையவர்கள்

இயற்றிய

# சிறப்புப் பாயிரம்.

நேரிசை யாசிரியப்பா.

இருசுட ரியங்கும் விரிகடற் புவியில்
அந்தமில் புகழ்சேர் நந்தமிழ் நாட்டிற்
றொல்குடிப் பிறந்த பல்கலை யறிஞன்
காவலர் புகழுங் கடைச்சங் கத்துப்
புலவரு ளொருவன் போற்றுந் தகையன்
தன்னகம் பிழைத்த தென்னவன் பொருட்டுத்
தென்றிரு வாலவா யொன்றிய பரமனை
வடதிரு வாலவா யிடனுறப் பாடல்
இன்றமி ழிசைத்த விடைக்கா டப்பெயர்
நன்றறி புலவ னுவலர் காவலன்
ஆன்றோர் கடிந்த அறனி விபற்னைகயுள்
ஒருசில டன்பனைக் குறுநல னுதவும்

பெற்றிய வாமெனல் கற்றுல கறிவகை
இன்பம் பொருளற மென்னுமுக் கூறும்
ஒழிபு மாமிவ் வொருநான்கு பகுதியும்
காம மாதிசாக் காட ருகும்
முப்பான் குனைனு முறையுட னுணர்த்தும்
மூவடி முப்பதென் றேவறு மொருநூல்
தந்தன னிவ்வருந் தமிழ்நூ லிற்குக்
குவலயம் புகழுங் குறிப்புரை யாதிய
தவலறத் தந்தனன் சவுந்தர பாண்டியன்
றன்பெயர் தாங்கியத் தமிழ்மது ரேசன்
பொன்புரை சேவடிக் கன்புறு தமிழ்மறை
யோதுறு முரிமையம் மாதொரு பாகத்
தெய்மிறை திருத்தளிக் கேற்றுப் புரிவோன்
ஐங்காப் பியமு மகனா னூறுஞ்
சங்கத் தமிழெனச் சாற்றிடு பிறவும்
ஒல்காப் பெருப்புகழ்த் தொல்காப் பியமும்
சமய நூலுந் தமிதமி யாய்ந்தோன்
இந்நிதி நேரும் பொன்னிதி யுடையோன்
செவ்வேள் சேவடி யெவ்வே ளையினும்
உள்ளத் திருத்தளி யுள்ளுறப் பெற்றோன்
உரைநடை யெழுத லுபநியா சித்தல்
பாட, லென்னப் பகரிம் மூன்றினும்
வல்லுந ணுகிய நல்லறி வாளன்

றுதிபெறு மதுரஞ் சுந்தர பாண்டிய
நாமம், புனைந்த பாமன் னவனே
இவ்வுயர் நூலை யெழுதா வெழுத்திற்
பதிப்பித் தளித்த பரோப காரப்
பெருந்தகை யாவான் பிறர்துயர் தன்றுயர்
என்ன நினைத்தே யன்னதைக் களைவான்
முத்தமிழ் வழங்கு முத்தம பாளையந்
தன்னிற் போலீஸ் சர்க்கிளின்ஸ் பெக்ட
ரென்னுமுத் யோக மினிதுற வேற்றோன்
றுட்டநிக் கிரகன் சிட்டபரி பாலனன்
சார்ந்தார் தமையருள் கூர்ந்தாள் தயாநிதி
கதிர்வடி வேலன் கழல்பணி
மதிதிகழ் டி. ஏ. மாணிக்க நாமனே.

# இப்புத்தகத்தில் அடங்கியவை.

உ

# பதிப்புரை.

இயலிசை நாடகமென்னு முத்தமி ழுமிழ்தினைப் பண்டைக் காலவூழி முதலாகத் தமிழுலக மக்கள் நுகர்ந்து இன்புற்று வாழ்ந்து வருமாறு உதவிபுரிந்து வந்தவர்கள் முச்சங்கத்தினும் இருந்துவந்த தமிழ்ப் பெரும் புலவர்களே யாம். இச்சங்க மூன்றினின்றுந் தோன்றி நாடெங்கணும் பரந்து பொலிவுற்றிருந்த பல்லாயிரக் கணக்கான நூல்கள் புறப்பாரின்றிச் செல்லினும் நீரினும் தீயினும் சிறுமொழியாளர் இழைத்த பெருங் கேட்டினும் சிதைவுற் றொழிந்தனவாக, அவற்றுள் பிழைத்து எஞ்சி நின்ற நூல்கள் ஒரு சிலவே யாம். அவற்றையேனும் புறந்து உலகத்தார்க் குதவி புரியாது அழிவுறுமாறுவிட நேர்ந்துள்ள இக்காலத்தே, சில அறிஞர்கள் வெளித்தோன்றி தாய்மொழிமேல் வைத்த பேரன்பினால் தமது வாழ்க்கை நலத்தையும் கூட ஒரு சிறிதும் பொருட்படுத்தாது விடுத்துப் பழந்தமிழ்நூற் பிரதிகளையே உறுதுணையாக விடாது முயன்று தேடிப், புதைய லெடுத்தாற்போலக் கண்டு பிடித்துள்ள சில பிரதிகளை வெளியிடவேண்டி அவற்றிற்கான பொருட் டுணையையும் தாமே வருத்தமுறத் தேடி,

அச்சிட்டு உலக மகிழ வீந்த பெருந்தகைமைக்கு என்றும் மற வாது நன்றி பாராட்டுங் கடப்பாடுடையவருள் தமியேனும் ஒருவனே யாம். அத்தகையோரால் வெளிவந்த சங்கநூல் களே உலகம் போற்றும் அருங்கலமாக அறிவுடையோர் கொள்ளப்படும் தகவுடையனவாம் என்பது வெளிப்படை.

அத்தகைய நூல்களுள் சிலவற்றைப் பயின்ற யானும், அந்நூல்கள் உதவிநின்ற பொருளின் சுவை வேட்கையாலே ஏட்டுப்பிரதிகள் தேடி சில கொணர்ந்து வந்தேன். அவற் றுள், அச்சிற் பதிப்பிக்க நேர்ந்தன ஒரு சிலவே யாம். அதன் பின்பும் சில விடங்களிற்சென்று ஏடு தேட நேர்ந்த பொழுது, சிதைவுற்றதாகி என்பாலிருந்துவரும் ஏட்டுப் பிரதி ஒன்றற் குச் சரியான சுத்தப் பிரதியொன்று, திருநெல்வேலி இந்து காலேஜ் தமிழ்ப் பண்டிதராயிருந்த திருவாளர் சொர்ணம் பிள்ளையவர்களிடம் இருப்பதாகக்கேள்வியுற்றேன். அதுபெறு தற்கான உண்மைகூறி வேண்டிய உதவியும் புரிந்த நெல்லை, திருச்சிராப்பள்ளி, சென்னை முதலிய கல்லூரிகளில் ஆங்கில மொழிப் பேரறிஞர் (English Professor) பதவியிலிருந்து ஓய்வெடுத் திருந்து வருகிற திருவாளர் M. S. பூர்ணலிங்கம் பிள்ளையவர்கள் செய்நன்றியை என்றும் மறப்பேனல்லேன்.

காலஞ் சென்ற தமிழ்ப் பண்டிதர் பிள்ளையவர்கள் உதவி யுள்ள சுத்தமான காகிதப் பிரதியோடு எனதேட்டுப் பிரதி யையும் ஒப்பிட்டுப் பார்த்து நண்பர்களது வேண்டுகோட்

கிணங்கி, உரைவிளங்கு குறிப்புரை யோன்றும் என்னால் இயன்ற வளவில் வரைந்து சேர்க்கப்பெற்று அச்சிடுதற்கேற்ற வாறு ஒரு பிரதியும் எழுதிவைக்கலாயினன். இதனை யறிந்த கற்றறிந்த நண்பர்களிற் சிலர் என்பால் வந்து மூலமும் உரையும் முற்றும் வாசித்துப் பார்த்து 'மூவடி முப்பது' என்பதை யேனையோருங் கண்டறியும் ஆர்வமிக்காராய்ப் புதுமைபுற வியந்து பாராட்டி விரைவில் வெளிவருமாறு இடைவிடாது என்னை ஊக்கினார்கள்.

இவ்வாறுள்ள இந்நூலின் புதுமையைக் கேட்டறிந்த எனதரிய நண்பரும் தமிழார்வ மிக்குடையவருமான உத்தம பாளையம் போலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் திருவாளர் T. A. மாணிக்கம் பிள்ளையவர்கள் என்பால் வந்து நூலின் பேர் முதலியவற்றை ஆவலோடு கேட்கலானார்கள். இந்நூல் "இடைக்காடனார் பாடிய மூவடி முப்பது மூலமும்-உரையும்" என விளக்கமுறக் கூறி, வரைந்து வைத்துள்ள சுத்தப் பிரதியைப் படித்து மகிழுமாறு அவர்கள்பாற் கொடுத்துதவினேன். அந்நூல் பெற்றுச்சென்று உரையுடன் முற்றும் பார்த்தறிந்து மனமகிழ் வெய்தியவர்களாய் என்பால்வந்து "இதனை அச்சிற் பதிப்பிக்கும் பணி என்னுடையது" எனக்கூறி வேண்டிய பொருளுதவி புரிந்து புத்தக ரூபமாக வெளிவந்துலாவும் பேருதவியைச் செய்தார்கள். இவர்கள் செய்த நன்றிக்கு யான் என்றுங் கடப்பாடுடையேன் என்பதை உள்ளவாறு உண்மையோடு தெரிவித்துக் கொள்கின்றேன்.

இத்தகு மனமான்புடையார்க்கு எல்லாம் வல்ல இறைவன், வேண்டிய நலங்களை யீந்து திருவருள் பாலித்தருள்வாராக; இங்ஙனம் உண்மையோடு தெரிவித்துக்கொள்ளும்,

அன்புள்ள,

மதுரஞ்-சுந்தரபாண்டிய ஓதுவார்,

மதுரை.

# ஆசிரியர் இடைக்காடனார்

## வரலாறு

இடைக்காடனா ரென்பார் மதுரைக்குக் குணதிசைக் கண்ணதாய இடைக்காட்டூரி லிருந்த இடையர் மரபிலே தோன்றி நின்றவராவார். இவரை இடைக்காடர், இடைக் காட்டார், இடைக்காட்டூரார், இடைக்காட்டூர்ச் சித்தர், கபி லன்றோழர், இடைக்காட்டுச் சித்தர், இடைக்காடனார் என வும் தமிழுலகத்தே பல்பெயர் வழங்கப் பாராட்டா நிற்பர். இவர் சிறு வயதிலே தமது சொந்த ஆட்டுக்கிடையினை நாடோறுந் தவறாது பக்கத்தேயுள்ள காடுகளிற் சென்று மேய்த்து வருவாராயினர். தக்க பிராயத்தினராய போழ்து தம்முரையடுத்து நாற்றிசைக்கண்ணும் பசுமைபூத் திலங்குவ தான பெருங்காடுகளினும் குன்றுகளினும் மலைப்பள்ளத்தாக் கினும் ஓடைப்பாங்கரினுமாகக் கிடைநிறுத்தி மேய்த்துவரும் போழ்து ஓர் நாளில் இருங்குன்றத்துச் சாரற்பாங்கினையடுத்த குளிர்ந்த பசும்புற்றிடல்கள், கண்ணைக்கவரும் மிகுந்த வனப் புடையதாய் தெள்ளிய நீரோட்டத்தோடு இனிய நறுங்காற் றும் பொலிந்து விளங்குவதைக்கண்டு அங்குச்சென்று கிடை நிறுத்தி மேய்த்தற்கு ஆவன் மிக்குடையவராயினர். பின்பு

அவ்வாறே அங்குபோய் சின்னாட்டங்கிக் கிடை பல்கியோங்கு மாறு வளர்த்துவர வெண்ணி வேண்டிய கைக்குடில், பாயல், கம்பளம், உண்கலம், உணவு முதலியவற்றை வறிய திடலின் மேற் கொணர்ந்து அணித்தாய் குடில் அமைத்துக் கிடை நிறுத்தி வேண்டிய இடங்களெல்லாம்சென்று ஆடுகளை நன்கு மேய்த்து வருவாராயினர்.

இங்ஙனம் மனமகிழ்வோடு மேய்த்துவரும்போழ்து ஓர் நாள் நண்பகலிற் காய்கின்ற கடுங்கதிர் மிகவே வேனிற்கஞ்சிய வராய்ப் பொழுது சிறிது சாயும் நேரங்காறும் அணித்தே குழையடர்ந்திருந்த மரத்து நீழலை நண்ணி ஆட்டின் மேய்ச் சலிலே கண்ணாக யிருந்தார். அப்பொழுதைக்குக் கண் ணுக் கெதிராய்தோன்றி உயர்ந்துகாணுந் திடல்மீது உச்சியி னின்று நேராக இரங்கிவரும் மாபெருஞ் சித்தரொருவரைக் கண் டதிசயமுற நோக்கிய வண்ணத்தரா யெழுந்து நின்றார். அச்சித்தர் பெருமானும் பக்கத்தே வரும்போழ்து காடர் நின்று கொண்டிருக்கும் மரத்தி னீழலைப் பார்த்து வெயின் வெம்மைக்காக சற்றுத் தங்கிச் செல்ல நினைந்தவர்போல் ஒரு பாலணுகி ஆங்குக்கிடந்துள்ள பெருங்கல்லைக் கண்டு நின்று சிறிதுள்கிக் கல்மீது அமர்ந்திருப்பாராயினர். அதனைக் காட னர்கண்டு ஒன்றுந்தோன்றாதவராய் வெருக்கொண்டாற்போற் பார்த்துக் கொண்டேயிருந்தனர். அதுகண்ட அழியாவாக்கை யுற்றிலங்கும் சித்தரும் அவரை நோக்கித் தம்பால் அவர்வருஞ் சைகையை அறியக்காட்டி வருகையை நோக்கியவா றிருப்பா

ராயினர். காடரும் மெல்ல நடந்து அச்சத்தோடு அவர்பால் அணுகி எது செய்வதெனத் தெரியாதவராய்த் தயங்கிய நோக்கத்தோடு நின்றுகொண்டிருந்தார். காடனாது விட்டகுறை வந்து சேரும்வேளை நெருங்கியமையை யறிந்த சித்தர் தமது பக்கத்தே கல்லின்மீ தேறியிருக்கக் கருணைபுரிந்தார். காடரும் முன்னுணர்ச்சியிற்பட்டவராய் சித்தர் பெருமான் காட்டிய விடத்தே ஏறி வணக்கத்தோடு அன்பு ததும்ப அச்சக்குறிப்போடு அவர் திருமுகத்தை நோக்கிய வண்ணமாய் வேறொரு நினைப்புமின்றி அண்மித்து வாளாதிருக்கலாயினர்.

இருந்துள்ள காடனார் முன்பு தாம் யோகுபுரி நிலையில் வீற்றிருந்தருளி 'நீ யிப்படி யிரு' என இருக்கச்செய்தார். அங்ஙனம் இருந்தாய பின்பு புறப்பற் றறவே கழன்று போமாறும் போனபின் கலக்கமறச் சிந்தை தூய்த்தாமாறும் அங்ஙனம் ஆன நல்லுள்ளங் கொண்டு கானற்கரிய அருநெறி கண்டோர்ந்து சேறற்கு இடமாய் நின்ற மூலமும் அம்மூல முதலாய்ச் செல்லும் மேனெறிபோம் வழியின் முன்பே இலங்கிக் கிடக்கும் நிலைக்களங்களையும் நெடுகக் கண்டிருந்து சென்று நெறியிறுவாயி னின்ற ஆணையந் தவிசேறியிருந்து திருவருட்டிறம் பல்கிய குறிப்புமொழியால் உய்ந்துபோந் திறம் பெறுமாறும் திருவுளங்கொண்டு அருள்வலி செறிந்த குறிப்பொடு 'என்னைப் பார்' என்று வெளிப்போந்த அருள் மொழியும் திருவரு ணோக்கமு மொன்றாகியவாறு,

"நாட்ட மிரண்டு மறிவுடம் படுத்தற்குக்
கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்" (தொல்-கள-ரு.)

எனவே பொருளடங்கிய குறிப்புரையால் செவியுட் புக மொழிந்து அதனுற் றம்மை ஒரு மனத்தோடு நோக்குமா ருக்குவித்துத் தமதருணோக்கமு மதனோடு சார்ந்து இரண்டு நாட்டமு மொன்ருகிய பொழுதில் நோக்கருள் புரிந்தருளுவா ராயினர்.

அருணோக்கின் துணைவலி யெய்திய காடனரும் புற நாட்டமொன்று மின்றியவராய் உட்புகுந்து நோக்கியபோழ்து தொண்ணூற்ருறு அங்குலி யளவமைந்த ஆக்கைக்கண்ணே நாற்பத்தேழுரை யங்குலி மேலும் நாற்பத்தேழுரை யங்குலி கீழுமாகப்போக இடையே எஞ்சி நின்ற ஓரங்குலி யளவின் கண்ணதான மூலத்தவிசின் அரிய காட்சியைக்கண் டாங்கதன் மேல் வீற்றிருப்பாராயினர். ஆங்கிருந்தார்க்கு நேரே மேல தாய் ஓர் அருநெறி காணத் தொடங்கியது. அவ்வருநெறி நோக்கி,

"ஒருசிறை நெஞ்சமோ டுசாவுங் காலே
உரிய தாகலு முண்டேன மொழிப" (தொல்-பொரு-ம)

என்றபடி ஏற்ப நன்கு நினைந்து மேலேறிச் செல்லுதுமாயின் ஓர் நிலை எதிர்ப்படுவதாகு மெனத் துணிந்து அருட்டுணை வலிகொண்டு ஏறிச்செல்வாராயினர். காற்றுந்துமிடமாக உள்ள உந்தியந் தவிசு புலனகியது. அதன்கண்ணிருந்து

துய்த்து மேலும் நெறியிடையிற் செல்லவே மேலுமேலும் நிலைகளந் தோன்ற அவற்றுளெல்லாம் முறையேயிருந்து துய்த்து நெறியிறுவாய்க் கொண்டு நின்ற ஆருந்தவிசின்மே லிருந்து இனி மேமேலசெல்ல நெறியின்றி யிருப்பதை உணர்ந்து வாளாவிருந்த போழ்து அளவி லின்ப மெய்தி நின்றார். அஃதறிந்த சித்தர் பெருமானும் அங்குக் காட்டு வனவெல்லாம் அவர்க்குக் காட்டி அவை பெற்றபின் மெல்லக் கூவி யழைத்தருளினர். அம்மொழி செவித் துளைவழிச் சென்றதேனும் மனங்கடந்து மேமேல சென்றிருப்பார்க்கு மெலிவுற்ற வோசையாய் உணர்ச்சியிற்ருக்காது போந்தன்மை யில், பெருகிய இன்பத் தீர்க்கப்பட்டு அதன்வயப்பட் டாராய்ப் போய்ப் புலனுகாதிருந்தது. அத்துணைக் கண்ணே நிற்பாரை அதற் கப்புறத்தே கிடக்கும் உய்யும் நெறிக்கு வழிகாட்டி யருளுவான் ருெடங்கிக் கேட் டுணர்வெய்துமாறு திருவுள் ளத்திற் குறித்து அணித்தேபோய் செவித்துளை வாயிலில் அருட்டிறங் கலந்த திருவாக்கின் பேரொலி தாக்க உரம் பெறக் கூவி யழைத்தருளினர். அக்குரலொலி யார்ப்பு காட னுரைத் திடுக்குறச் செய்து விழிக்கவைத்து அச்சமுற வாய் திறந்து மொழியியம்பும் நிலையில் கொண்டுவந்து நிறுத்தியது. இத்தகுநிலைதான் மாணுக்கனுதற் கியைந்த நிலையெனப் பெறப்படுவதால் அந்நிலையில் நின்றுரை மாணுக்கனுதற்குத் தன்னுணை மொழி வழிப்படுத்தல் வழக்காதலால், காடனுரை நோக்கி "என்னுணை மொழிக்கியைய வொழுகுவதாயின் நினக் கொன்று மொழிகுவ துளது அதனைப்பெற வுறுதி யுளதோ"

வென ஆணைகொண்டு நிகரற்று நின்று கூறுவாராயினர். காடனூரும் புறநாட்ட மொழிந்து அகத்தேயுள்ள ஆறுநிலை யும்பெற்று உப்பாற் போகமாட்டாது விழித்துச் செய்வ தொன்று மறியாது தயங்கு நிலையில் எல்லாம் வல்ல பெருமா னது ஆணைமொழித்துணை ஒன்றேயன்றி பற்றுந்துணை வேறொன்றுமின்றி அருட் டிறத்தின்பாற் பட்டவராய் அஞ்சி மெய்மையுற விருந்து 'நும்மாணைமொழி கடவாதென்று மொழுகுவல்' என மெலிந்த குரலோடு கூறுவாராயினர். ஆணைமொழிக்குடம்பட்டு மொழிந்த மெய்மொழி கேட்டு ஏற்றுக்கொண்டு தாமிருந்த விருக்கை நிலையினின்றுங் கலைந் தெழுந்து நின்று, பெருந்திற லமைந்த பொருட் டிறத்தினைத் தமது அங்கைத் தலம்பொலிந்துததும்பத் தூக்கிக் காடாது உச்சந்தலைமேல் அருளுற வைத்துத் தீக்கைபுரிந்து கூறுவா ராயினர்.

'உய்தற் கேதுவாய நெறியாவது நின்பால் யான் வைத்த பேரன்பினல் இப்போது கூறப்போகின்ற ஆணையின்பாற் பட்டமொழியே யாகும். அம்மொழி வரம்பிகவாது என்றும் ஒழுகி நிற்குவையாயின் மேலான பெறலரும் பேற்றினை யெய் துவை; அன்றி அவ்வாணைமொழி பிழைக்குவையாயின், எழு மையினும் நீ ஈடேறுதற்கில்லாது இழிவாய நிரையம்புகுவை எனச், சுடுதீப்போன்ற கடுங்குரலிற், செவியுட்புக சாபவாய் மொழியொடு புணர்த்திக் கூறி நின்றார். அம்மொழி கேட்ட வுடன் அஞ்சிக் கலங்கினரேனும் ஆசானையன்றி யோர் பற்று

மின்றி நின்றவ ரர்கலான், தெளிவுற்றிருந்து உடம்பட்ட வாறினை மொழிந்து தெரிவித்திருந்தார். உடம்பட்டவாறினை உணர்ந்த சித்தர் பெருமானும்,

"நிறைமொழி மாந்த ராணையிற் கிடந்த
மறைமொழி தானே மந்திர மேன்ப" (தொல்-செய்-கஎஅ)

என்றபடி ஆணைமொழி வழியிற் 'சொல்லாமற் சொன்ன வரை' 'சொல்லாத வார்த்தையைச் சொன்னவண்டி தோழி' என்ற சொல்லாது சொல்லி, மறைமொழியான குருமொழி வைத்தருளினார். அதுகேட் டுணர்வினிடைப் பெற்ற பொழுதே உய்யவைக்கவந்த மெய்மொழி யிதுவே என்பதைத், தன் னனுபவத்தாற்கண்டு எழுகோடி மந்திரமும், பயன்வேறு கொண்டதாய்ப் போயொழிவதால் மந்திர மென்பதன்றாகிப் பொய்த்துப் போவதாமென்பதையும் இதனாலே தெளியவறிந் தார். அறிந்த வதனால் மந்திரம் என்பது இஃதொன்றே யாகுமெனத் துணிந்து உட்கொண்டு மெய்மறந்திருந்தார். முட்டறுத்து வீடுபெற வைத்தருளிய நிறைமொழியானது ஆசான தருள்வலியால் ஆருந்தவிசின்மேல் மனமே அறிவாகி நின்றுவாழப் பெறுவார்க்கே பொருளீயுந் திறத்தது ஆக லான், அப் மறைமொழியும் ஆணைமொழிவழியே பெறப்படுவ தாகலானும் அவ்வாணைபெற நிற்றற்கிட மாருந்தவிசன்றி வேறோரிடமும் குறிப்பிடுதற் கின்றாகலானும் அத்தவிசே படைத்தல்,காத்தல், அழித்தல்,மறைத்தல், அருளல் என ஐம் பெருஞ் செய்தியுள்ளும் மேம்பட்ட அருளலைக் கொண்டுள்ள

தெனத் தத்துவநூலும் கூறுகின்றமையானும் அதற்கு ஆணை (ஆக்ஞை) யந்தவிசேன ஆன்மேரார் பெயரீந்து வைத்தவாறு மறிக. அவ்வாணை வரம்பிற் கேட்டறிந்திருந்த காடனர் அம் மொழியுண்மையை,

"எழுத்தொடுஞ் சொல்லொடும் புணரா தாகிப்
பொருட்புறத் ததுவே குறிப்புமொழி என்ப"
(தொல்-செய்-௧௭௬)

என்றதன் பொருள் கடந்த தொன்மையை உணர்த்தவந்த குறிப்புமொழியெனத் தெளிந் ததிசயமுற்றார். இவ்வாறு அதிசயமுறச் சித்தர்பெருமான், வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப்பாலாய், எல்லாமா யல்லதுமா யிருந்ததனை யிருந்த படி யிருந்து காட்டிச் சொல்லாமற் சொல்லிக் காடர் தலை மேல் தீக்கை பெறவைத்த கையினை எடுத்தருளினர்.

பெறலரும் பரிசுபெற்றுய்ந்த காடரும் கண்விழிப்பெய்தி யெழுந்து தம்முன்னே தண்ணருள் பூத்துப் பொலிந்து வீற் றிராநின்ற ஆசானது திருக்கோலங்கண்டு, அவரது திருவடித் தாமரைகளின்மேல வீழ்ந்து, அகங்குழைந்து மெய்யுருகத் தொழுது திருவடி யிரண்டுமே என்முடிக்கணியென தலை தாழ்ந்து பொருதப் பணிந்தவாறே 'எல்லாம் வல்ல இறைவ ரென்பார் இவர்தாமே என உள்ளத்திற் றுணிந்தெழுந்து கை தலைமேலேறிக் குவிய வாழ்த்திப் பரவி நின்றார். நின்ற காடர் தங்கண்கான முன்பாக வீற்றிருந்தவாறே காணாது மறைந்து போயருளினர்.

மறைந்து போகிய ஆசானது திருவருட் டிறத்தினை வியந்து,

> "கேட்டாயோ தோழி கிறிசெய்த வாறொருவன்
> தீட்டார் மதிள்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
> காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டி
> தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி
> நாட்டார் நகைசெய்ய நாமேலை வீடெய்த
> ஆட்டான்கொண் டாண்டவா பாடுதுங்கா ணம்மானாய்"
>
> (திருவாசகம்.)

என்றபடியாய் நிகழ்ந்தவெல்லா நினைந்துகூறித்திருவருளினைப் பாராட்டி ஆணைமொழியிற் பிறழாதவராய் நாடோறு முறையாகத் தீக்கைநெறி கடைப்பிடித்து வழுவாது ஒழுகிவருவாராயினர். அவ்வொழுக்காற்றின் நெறிமுறையாக மூலத் திருந்து காற்றுந்தும்

> "உந்தி முதலா முந்துவளித் தோன்றி
> தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇ"
>
> தொல்-பிறப்-க)

என்றவாறு உந்தி முதலாக வளியொடு அருநெறிமேற்சென்று நிலைகளனைத்துங் கடந்து ஆறாவது இடமாகிய ஆணைநிலை நின்றதற் கப்பாலேக வழியறியாது திகைத்தனர். மேலுள்ளது எதுதானென நோக்கிய பொழுது பாழாகவே எங்கும் புலப்பட்டதேயன்றி வேறெவற்றையுங்கண்டிலர். இதுகாறுந் துய்த்

2808



தனவெல்லாம் பொய்பாய் வெறும்பாழாக வானத்தைக் கண்டு கடக்கற்கரிய பாழாமென மலைப்புற்று வேறொன்றுந் தோன்றாமல் ஆசானது ஆணைவழிநின்று திருவருளை யுன்னினார். உன்னியபோது,

> "இயன்ற மருங்கின் இனைத்தென வறியும்
> வரம்புதமக் கின்மையால் வழிநனி கடைப்பிடித்
> தோம்படை யாணையிற் கிளந்தவற் றியலாற்
> பாங்குற் வுணர்தல் என்மனார் புலவர்"
>
> (தொல்-உரி-கூஅ)

என்றதற் கிணங்க பாழைக் கடந்தபோதே அப்பால்தாய் விளங்கும் செம்பொருளிலையான உய்யும் நிலைபெறுதல் கூடுமென உணர்விற் றெளிவாராயினர். தெளிந்த உணர்ச்சி வாயிலாய் உணர்வின்வலி, செறிவுற்று வளருங்காறும் ஆசானது திறத்தினையே நோக்கிப் பாழ் முன்பாகவே சலிப்பறவிருப்பாராயினர். அவ்வாறிருந்த போழ்தில் உணர்வின்வலி மிக்கேற வேற இருவினையிற் பிரிந்து மீட்சிக்கட் செல்லும் உணர்வாற்றல் பெற்றவராகி நின்றார். அங்ஙனமாகிய பொழுது

> "உணர்ச்சி வாயில் உணர்வோரின் வலித்தே"
>
> (தொல்-எச்-கூரு)

என்ற தன்மையில் வேண்டிய பாலித்தற்குத் திருவருளானது ஒப்பிலாத் துணையாக தம்பால் வந்துற்றது. அதனால்

'வினைவயிற் பிரிந்தோன் மீண்டுவருங் காலை
இடைச்சுர மருங்கிற் றவிர்த்த லில்லை
உள்ளம் போல வுற்றுழி யுதவும்
புள்ளியற் கலிமா வுடைமை யான (தொல்-கற்-௫௩)

என்றபடி கடத்தற் கொண்ணாத பெரும்பாழினைக் கடக்கும் ஆக்கமுடையாராய் வினையிற் பிரிந்து மீண்டும் இடைச்சுரம் போன்று ஊடே கிடந்த பாழினையுங் கடந்து வேண்டிய பெற லரும் பேற்றினையும் பெற்றுய்ய அப்பாலின்கட் போயொளிர்ந் தார். இவ்வாறு திருவருட் டுணைவலியால் பாழ்கடந் துப் பாற் சென்ற காடனார்,

"பொருட்குத் திரிபில்லை யுணர்த்த வல்லின்"
(தொல்-எச்)

என்ற மெய்ப்பொரு ணிலையெய்தி ஒப்பிகந்த ஒரு தனியான கடவுணிலை என்னப்படும்

"விளிவின்
றிருணிற முந்நீர் வளைஇய வுலகத்து
ஒருநீ யாகத் தோன்ற விழுமிய
பெறலரும் பரிசி னல்கு மதி" (திருமுரு-படை)

என்ற பெறலரும் பேறுபெற்று இடைக்காட்டுச் சித்தரென யாவரும் போற்ற மறத்தல், மயக்கம், சாக்காடு என்றிவை யின்றி வாழ்ந்து வருவாராயினர்.

இவர் தம் அறிய பேற்றினை யறிந்து கொண்டாரான மூலவருக்கம், கைலாயவருக்கம், இடபயோகிவருக்கம், ஆனந்த

வருக்கம், சங்கிலிச் சித்தர்வருக்கம் என ஐவருக்கச் சித்தர் குழாமும் இவரை நேரிற்கண் டளவளாவி மகிழ்ந்து இறும்பூ தெய்திப் போயினர். சில சித்தர்கள் இவர் முன்பே தோன்றி மொழிவழக்கத்திற் றிறம்பெற்றா ரென்பதைக் கண்டறிந்து கொள்ள, சில பல திறம்படப் பேசிக்கொண்டிருந்து முடிவா கப்பேசி எழும்பொழுதில் திருமால் பிறப்புப் பத்தனுட் சிறந்தது யாதாமென வினவியது கேட்டு,

'சேரி மொழியாற் செவ்விதிற் கிளந்து
ஓதல் வேண்டாது குறிப்போடு தோன்றிற்
புலனென மொழிப புலனுணர்ந் தோரே''

(தொல்-செய்-உசக)

என்றவாறு 'ஏழை இடையன் இளிச்சவாயன் என, வினையத் தோடு சேரிமொழியிற் புலனாக வைத்து விடையிறுப்பாராயி னர். இத்தகு விடை பகர்ந்த தன்மையைக் கண்டறிந்து அதிசயம் மிக்குற்றாராய் பெரிதும் புகழ்ந்து பாராட்டிச் செல்வாராயினர். ஓர் போழ்தில் எதிர்காலத்தே; உலகம் மழையில்லாது விளைவஃகிப் பன்னீராண்டு வற்கடமாகி உயிர் கள் பசியால் வருந்தி யழிந்து போதலைக் கோணிலையிற் கண் டோர்ந்து தமதாட்டிற்கும் தமக்கும் உணவெய்தப் பெறு நெறியை அப்பொழுதே எளிதாகக் கண்டுணர்ந்தார். அது முதலாக மழையை எதிர்பாராத அமுரித்தழையையும் கட னீரையும் தின்னவும் பருகவும் பயிற்றுவித்தார். தமக்குண

வாக வரகினை ஈரமண்ணோடு கலந்து பிசைந்து சிறிதள வாகவே உடனே உலர்ந்து போமாறு படையேற்றி யேறிய மண்சுவர்மேற் கூரை வேய்ந்து குடிலொன்றும் சமைத்துக் கொண்டார். கொடிய வற்கட முற்றபோது நறுங்காற்றும் நன்னீரும் பெறுதற்கியலாதுபோய் எல்லாவுயிரும் வெப்புற்று வாடிவதங்கி அழியத் தொடங்கின மன்பதையின் கூட்டுறவும் காணாதொழிந்தது. உலகம் பாழாய்க் கிடந்தது. இக்காட்சி காண வானத்திருந்து இழிந்து மண்வந்தெய்திய கோளாயினர் ஒன்பதின்மரும் மன்னுக வாழ்வுந் தாழ்வும் தமதாற்றன் மிகக செய்திக்க ளுள்ளதாமெனத் தருக்கித் தாம்சென்று காணுமிடனெல்லாம் பாழ்போகி நிற்றலையே கண்காணித்து வருகின்ற வோரிடத்தில் ஆடுகளுடன் ஒருவர் இனிதுற இருந்து வருவதைத் தோற்றப் பொலிவாற்கண்டு உடனே தம்முருக் கரந்து மானிட வுருவந் தாங்கி அவர்பா லடுத்து வணங்கி நின்றார்கள். வஃபினென வாய்குளிரக் கூறி குடி லின்பால் இருக்கையிட் டமரச்செய்து ஆடுகளைச் சுவரிடை யுரிஞ்சவிட்டு மண்ணோடு உதிர்தரும் வரகினைக் கொண்டு ஆடுகளை விலக்கி நிறுத்தி ஆட்டின்பால் நிறையப்பெய்து அட்டு அடிசிலைக் கலத்திற் படைத்து நல்விருந்தளித்தார். அதுகண்ட ஒன்பதின்மரும் இவர் முக்கால முணர்ந்த பெரியா ரெனத் துணிந்து தெளிந்து புத்துணவுண்ட மயக்கத்தால் சிறிது கண்ணயரத் தொடங்கினர். அஃதோர்ந்த காடனார் ஒவ் வொருவர்க்கும் தனிச்சேக்கை யீந்து படுத்துறங்க வைத்தார்.

அயர்ந்த தூக்கத்தில், கோளாயினர் இவரென்பதை யுணர்ந்த காடனர் மழைவளஞ் சுரந்து மண்ணுயி ரனைத்தும் இன்புற்று வாழ்ந்தோங்குதற்கேற்பச் சேக்கை நேருற வினைத்துவைப்பா ராயினர். அப்பொழுதே பொய்த்துப்போன வானம் விரிவிசும் பின்மே லெழுந்து சூற்கொண்டு கறுத்து வலனாகத் திசை யெங்கும் கவிழ்ந் திருண்டு காலூன்றி தலைப்பெயலாகப் புது மழை யிரங்கிப் பாட்டம் பாட்டமாய் விடா தடர்ந்து பெய்யத் தொடங்கியது. நீர் உவட்டெடுத்தோடி மண்ணுந் திசையுங் குளிர்ந்து குளிர்காற் றெடுத்தது. குளிர்ந்த வாடைக் காற் றால் அயர்ச்சிநீங்கி விழித்த கோள்கள், பெருமழை பொழிந்து கொண்டிருப்பதைக் கண்டு திடுக்குற்று அச்சுற்றொருவரை யொருவர் நோக்கித் தாங்கள் படுக்கையால் நிலைமாறிய துணர்ந்து தம்முருக் கொண்டெழுந்து பெரியார்க கஞ்சி வணங்கி அவரிட்ட கட்டளை யேற்று விண்ணைத் தொளிகெழு மண்டிலமாகப் போய் மிளிர்ந்தார்கள்.

பிறிதோர் நாளில் காடனர் மதுரையை யடைந்து பாண் டியனது அவைக்களமேறித் தமது பாடற்றிர மரசனறிய விளம்பி நின்றபோழ்து தருக்குற்றுக் கேளாமல் மதியாதிருந்த மைகண்டு பிணக்கமுற்று நீங்கி நகர்நடு விலங்கும் கோயில்புக்கு சொக்கநாத அடிகளை வணங்கிக் கூஉய் பாண்டியனது செய லைச் சலிப்புறக் கூறி நகர்விட்டேகிப் புறம்பே வடதிசையிற் போயினர். அதுகேட் டருளிய இறையனரும் பொறுது தேவியார் அங்கயற்க ணம்மையாரோடு சிவகணங்கள் புடை

சூழ மதுரையினகர்ப்புறம்போ யமர்ந்தார். தோழர்வேறு தாம் வேறெனக் கருதாது சங்கத் தலைவராயிருந்துவந்த கபிலரும் தோழருக்கு நேர்ந்ததை ஓர்ந்தபொழுதே மதுரைப்பேருரை விட் டகன்று வடக்கண்ணே பேகினர். சங்கப் புலவர்களும் கபிலரைப் பின்பற்றிப் போயினர்கள். இவ்வாறு நேர்ந்தமை கேட்டுணர்ந்த பாண்டியன் மனந்தடுமாறி மயங்கி, இடைக் காடனார் சென்ற வழியைத் தேடிக் கண்டுவணங்கிப் பிழை பொறுத் தருளுமாறு வேண்டிக் கொண்டனன். அதனுக் கியைந்து காடனாரும் பிழைபொறுத்துப் பிணக்குத் தீர்ந்தார். பின்னர் பாண்டியனும் நகர்ப்புறத்தே வடக்கண்ணதாய் வீற்றிருந்தருளிய சொக்கநாதப் பெருமான் திருமுன்னர்த் தாழ்ந்து அறியாது செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டினன்.

நகர்ப்புறத்தே வடக்கண்ணதாயேகி வடதிருவாலவாய்ப் பிரானெனக் கோயில் கொண்டு வீற்றிருந்தருளிய சொக்க நாதப் பெருமானது, தேவியாரையும் கபிலராதி சங்கப் புல வர்களையும் வேண்டி வணங்கப் பிணக்குத் தீர்ந்தவராகி அக நகர் நண்ணி வீற்றிருந்தருளினர்.

இவைபோன்ற இவரது வரலாறு கேட்கப்புகின் அள விலவாகும்; அவற்றினுள் இன்னுஞ் சில வரைந்து செல்லலா மெனினும் மிகவும் விரியுமெவன வஞ்சி இம்மட்டோடு ஒரு வாறாக நிறுத்திக் கொள்கின்றனன். இப்பெரியாரின் விரிந்த வரலாறு கேட்க விரும்பின் இவரைத் தெய்வமாப் பேணிக்

கற்கொண்டு திருவுருவாக்கிக் கோளொன்பதின்மர் திருவுருவங்களும் அந்நாளில் ஆண்டுத் தோன்றியவா றந்நிலையில் அணித்தே சமைப்பித்துக் கோயிலாக்கொண்டு வணங்கிவரும் இவர் தோன்றிய இடைக்காட்டூரினும், அதனைச் சூழ்ந்து சார்ந்துள்ள ஊரின் பகுதியினும் பாண்டிய நாட்டினும் பொதுவாகத் தமிழ்மொழி யுலகத் தெங்கணுமே மரபுவழியிற் கேட்டறிந்தார்பால் எளிதாகத் தெளியக் கேட்டறிந்து கொள்ளலாம்; நிற்க.

இவரிருந்து வந்தது, இடைக்கழி நாடாமெனவும் கூறுவாருஞ் சிலர் உளர். அவர் கூற்றுக்குச் சான்றாக வேண்டிய குறிப்பும் தொடர்ந்த வரலாறு முதலியவும் உலக வழக்கினும் சரித்திர ஆராய்ச்சினும் பெறுவது அருமையாக இருத்தலான் அந்நாட்டைப்பற்றி யாதொன்றுங் கோடற்கியலாது விடுக்கக் கூடியதாய் இருப்பதை ஓர்ந்துகொள்ள அடியிற் காணுஞ் செய்திகள் வெளிப்படையிற் புலப்படுவதா யிருந்து வருகின்றன; அவை வருமாறு:—

இடைக்காடரைப் 'பின்னமில் கபிலன் றோழன் பெயரிடைக் காட னென்போன்' எனத் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராண முதலிய நூல்கள், கூறிவருகின்றமையானே கபிலர்க்குத் தோழரெனப் பாராட்ட இருந்து வந்தவர் இடைக்காட ரென்பது வெளிப்படையே யாகும். கபிலர் பிறந்த திருவாதவூர், கபிலன் றோழர் தோன்றியுள்ள இடைக்காட்டூர்க்கு வடமேற் கண்ணதாய் ஒரு காவதத்துள்

இருந்து வருகிறது; அன்றியும் கபிலன் ளேழுரான இடைக் காடாது ஊர், ஊரேழிடையுறக் கொண்டு நின்று காடாகி யிருந்த காட்டுநாட்டினிடைக் காட்டகத்தே தோன்றி நின் றமை கொண்டு இடைக்காட்டூர் என்னும் பெயர்த்தாய் அறிய வழங்குறுவதாகி நின்றது. இவ்வூர் கொண்ட காட்டு நாட்டின் வடமேற்கு முதலாக வடகிழக் கிறுதியாக எல்லை மேற் கொண்டிலங்கும் பறம்பு நாட்டின் முன்னூறு ஊர்களில் ஒன்றுக விளங்குவது திருவாதவூர். இவ்விரு வூர்களிற் ளுேன்றி நின்ற இவர்கள் இருவரும், கல்வி கேள்விகளின் மிக்கு, விழுப்பந்தாங்கிய ஒழுக்கமுடையவராய் ஒருகாலத்தவ ராகி விளங்கிப் பிரியா நட்போடிருந்துவந்த செய்தி, ஊறிந்து கபிலன் ளேழுரென வழங்கியவாறே உலகமுமறிந்து வழங்கி வந்ததா மென்பதை மறுப்பா ரொருவரு மிலர். இவ்விருவர் தம் புலமையும் வெளியாகி யோங்கத் தத்தம் நாட்டிற்கேற்ப, முல்லையை இடைக்காடனாரும் குறிஞ்சியைக் கபிலரும் பாடு தலிற் றிறம் பெற்ருராய் அக்காலத்துலகம் போற்ற விருந் தமை யறிதற்குச் சங்க நூல்களில் இலங்கிவரும் இவர்கள் பாடல்களே தக்க சான்ருகும்.

பிராயமேறியபின் இவர்கள் தத்தம் ஊரைவிட்டு நீங்கிய பின்புங்கூட ஒருவரை ஒருவர் அடுத்து முன்னினும் அணித் தாகவே, மருத்துமன்றிருந்த இருங்குன்றத்தில் இடைக்காட ரும் பாரியினது கடிமதிள் சூழ்ந்த பறம்பின்மேல் 'கபிலர் குட்டு' என்றுள்ள கபில ரிருக்கையிற் கபிலரும் சீரிய ஒழுக் கத்திற் குற்ற விடமாக்கொண்டு நட்புரிமையி னின்று நீங்கா

திருந்து வந்தமையை இந்நூலுரையாசிரியர் வாக்கும் பாரி பறம்பும் இற்றைக்கும் தெரிவித்தவா றிருந் திலங்குகின்றன. இவ்விருவரது ஊர்களையுடைய இரண்டு நாடுகளும், வெள் ளாற்றை வடக்காகவும், இருங்குன்றையும், வையையாற் றின் கீழ்பாங்கின் வடகரையையும், தெற்காகவும் எல்லையாக் கொண் டிலங்கிவரும் புகழமைந்த வேளிரது, பழமை நீண்ட துவராபதி நாட்டின்பாற் பட்டனவேயாம். துவராபதி நாடும் பாண்டிமா நாட்டின்கண் ணிருந்து வருதலைக் கண்கூடாக யாவருங் கண்டறிந்து வருதலே போதிய சான்றாகும்.

இவ்வகையானே ஊரின்பேர் குறிகோ ளொன்றுமின்றி வீணே 'இடைக்காடர் இருந்து வந்தது இடைக்கழி நாடு' எனவே நாடொன்றை மட்டும் கூறிப்போவதில் யாதொரு பயனுமின்றா மென்பதும் காண்க

இதனு லறிய நின்றது யாதுதானோ வெனின், இடைக் காடருங் கபிலரும் ஒருவர்க் கொருவர் அணித்தாய வூரிற் றோன்றி நட்புடையாரா யிருந்துவந்தா ரென்பதும் இருவரு மே ஊர்விட் டேகிய பின்பும் பாண்டித் துவராபதி நாட்டிருங் குன்றும் பறம்பும் வாழ்தற்கிடமாக்கொண்டு உயர்நலமுடைய மிக்காராய் வாழ்ந்து வந்தாரென்பதும் ஐயமற உணரப் பெற்றமையானே இடைக்காட்டூரார் என நாடு வழங்கிவரும் பேரடைந்த இடைக்காடனார்க்கு, ஊராயது பாண்டி நாட் டின்கணுள்ள இடைக்காட்டூரே என்பது துணியப்பெற்றமை காண்க.

மதுரஞ்-சுந்தரபாண்டியனார் உரைத்த

ஆசிரியர் இடைக்காடனூர் வரலாறு

முற்றியது.

---

## இந்நூலின் மூலத்தினும் உரையினுங் கண்ட அரிய குறிப்புகள் முதலியன.

இந்நூலாசிரியர் நூலின் அதிகாரந்தோறும் சுருங்கிய சொல்லில் நெருங்கிய பொருளுற உவமச் சுவையோ டமைய நிறுத்திய சிற்றடிச் செய்யுள்கள் கற்றறிந்தார் கண்டு மனங் களிக்குந் தகைமை யுடையனவாம்.

செய்யுணிலைக் கேற்றவாறு சுருங்கக்கூறி விளங்கவைத்த உரையாசிரியரின் உரைத்திறம், மூலம் வெளிப்படையாவதின் நன்குபோற்றற் பாலதாம்.

அவை வருமாறு:—

கருவி:—9-ஆம்அதிகாரத்தினின்ற நேராநட்பு என் பதைப், பகையினை யொடுக்கி மேம்படுக்குங் காலமாராயுங் கருவியாகவும், தொடர்ந்தநட்பு மெய்நட்பாக அளந்தறி கருவி யாகவும்,

13-ஆம்அதிகாரத்தி னின்ற தூக்கத்தை, மறுநிலை யுணரற் கருவியாகவும்,

18-ஆம்அதிகார ஈயாமையில் தீவினையைத், தானே செய்வினை தான்றுய் கருவியாகவும்,

30-ஆம்அதிகாரத்தின் சாக்காட்டை, இம்மை முடிக் கும் கருவிபாகவும் கூறிவைத்துள்ளமை கவனிக்கற் பாலது.

பருவம்:—29-ஆம்அதிகாரத்தின்ற மூப்பானது, இரு வகை யோர்வையும் ஏற்றவாறு உணரும் பருவமாகவும்,

மருந்து:—14-ஆம்அதிகாரப் பொச்சாப்பை, முனைத் தெழு உளிவீர் மருந்தெனக் கூறிவைத்ததும் இவ்வாறே கூறிப் போந்தனவும் நோக்கற் பாலது.

தமிழர் மரபு:—29-ஆம்அதிகாரத்தினின்ற மூப்பைப் பற்றிக் கூறும்பொழுது 'கான்மரமெனினும் முதுமை நோக் கிப் போற்றுக' வென்பது தமிழர் மரபெனக் கூறியது அறியற் பாலது.

மனிதர்பா லுள்ள நிலைமூன்று:—13-வது தூக்கமென் னும் அதிகாரத்தில், தூக்கத்தை ஏதுவாக்கொண்டு நனவு நிலையை முதலாவதாகவும்; இரண்டாவது, நனவொழிந்த விடத்துப் பொறிபுலன்புடை பெயருங்காற் றோன்றும் பிரி தோர் நிலையினை இரண்டாவதாகவும், அப்பிரிதோர் நிலையுமொழிந்தவிடத்து தூக்கத்துக் கண்டது கொண்டு, நினைத்து நுவறற்கின்றி முடிபினின்ற அசைவற்றநிலை மூன் றுவதாகவும் உள்ள நிலைமூன்றினையுமறியக் கூறி, நிலையுண ரற்கருவி எனப்படுவது தூக்கமெனக் கூறியது நன்கு ஓரற் பாலதாம்.

---

## இந்நூலின் செய்யுள்களிற் கண்டுள்ள உவமக் குறிப்பு முதலியன.

| பக்க எண் | அதிகாரம் அல்லது பாட்டெண். | விஷயம். | உவமித்து நிறுத்திய உவமங்கள் முதலியன. |
|---|---|---|---|
| 33 | 38 | அழுகை | உறுதுயர் தடுச்குநர் பெருந் துணை, உய்வின் மறமீர் கழு வாய், மறைநுவல் தோன் மொழியுடைமை. |

| | | | |
|---|---|---|---|
| 15 | 15 | ஆசை | சீர்த்தித்துணை, கிளைப்பூற்றுக் கோல், பெருக்கச்செவிலி. |
| 21 | 18 | ஈயாமை | தானே செய்வினை தான்றுய் கருவி. |
| 20 | 17 | கண்ணறுத்தல் | போவாய் பொங்காப் பொருளுறைபுழி, வாய்மையின் வித்து, நம்பகச்செவிலி. |
| 12 | 12 | கலக்கம் | தெளிவின்வித்து, நலம்பட நாட்டுநெறிவிளக்கு. |
| 25 | 25 | குடி | தொழுநோய் துடைக்குந் தொன்முறை மூலியை, விண் விழைதுப்பு. |
| 30 | 26 | தற்றுணையாக்கம் | தாமே தமக்கிகலுறவு, மேன் மேற் கிளர்வு. |
| 17 | 16 | துறவறவிழிவு | சிறுவரை விலங்கின் பனைத் துணையாழ்த்து நீருடைமை. |
| 13 | 13 | தூக்கம் | மறுநிலை யுண்டென உணரற் கருவி. |
| 11 | 11 | நல்குரவு | தேவுண்மை யுணர்த்தல். |
| 30 | 27 | பிணி | புரிந்ததன் கழுவாய், புரியாது விலக்குணி, மருத்துநூன் மாணுறுத்து நன்மணி. |

| | | | |
|---|---|---|---|
| 8 | 7 | புறப்பொலிவு | சிறுவாழ்விற் பெருந்துணை, சீர்த்தியின் கந்து, பெரியோ ரவையினு மீதிட மளிப்பது. |
| 14 | 14 | பொச்சாப்பு | முனைத்தெழுவுளைவீர் மருந்து, யாக்கை யிணைவினை மறப்பு. |
| 5 | 4 | பொய்யுரை | ஒண்டொடி முயக்கப்புணை, இல்லற வாழ்விற் கேற்புரை. |
| 24 | 21 | பொலிப்புறமொழி | தோண்மெலிவுடையார் தோழன். |
| 23 | 20 | வெகுளியாவது | மெய்யுரனில் குணம் வெகுளி. |

உவமம். இந்நூலிற் கண்டுள்ள அதிகாரப் பொருள்களை மணி, புணை, பெருந்துணை, கந்து, வித்து, நலம்பட நாட்டு நெறிவிளக்கு, கருவி, மருந்து, துணை, ஊன்றுகோல், செவிலி, தோழன், மூலியை, கழுவாய், எனமுறையே அவ்வவ் வதிகாரங்களில் உளந்திகழ்தர நலம்பட நாட்டிய உவமங்களா யமைத்துச் செல்கின்ற அழகு, பாராட்டத்தகுந்ததே யாகும்.

மாண்பறி பொருண்மொழி:—அழுகை, கண்ணறுத்தல், குடி, கொலை, தூக்கம், நல்குரவு, பிணி, புறப்பொலிவு, பொச்சாப்பு, பொலிப்புறமொழி, சாக்காடு என்னும் மிவற்றை முறையே அழுகையு மியலவே, கண்ணறை நீரதே, (குடி) விழைப, பாங்கறி கொலையே, (தூக்கம்) பொலிகவே, வாழி நல்குரவே, பிணி நிலவு பான்மையதே, (புறப்பொலிவு)

கொளலே, (பொச்சாப்பு) ஏற்க விவ்வுலகே, (போலிப்புற மொழி) போற்றனன்றரோ, (சாக்காடு) வாழிய எனப் பெரும் பாலும் தேற்றேகாரம் பெறக்கூறி இயல்பு, நீர்மை, விழைவு, பாங்கு, பொலிவு, வாழ்த்து, நிலைபேறுண்மை, கோள், ஏற்பு, போற்றுவது என்பனவற்றை உடைய உடைமைப் பொருள்க ளாக, மேற்கூறிய அழுகைமுதலி யவற்றோடிணைய முறைபுற நிறுத்திச் சாக்காட்டை வாழிய எனக்கூறி முடித்துநின்றமை, கண்டு வியந்து போற்றற் பாலனவாம்.

உரைமாண்பு:—முதலாவது அதிகாரச் செய்யுளில் ஆசி ரியர் கூறிய தென்புல மின்புற எனற்கு, உலகிய னிறுத்தும் பொருண்மர பழியாது தமிழுலக வின்பம் யாண்டும் நிலை பேறுபெற என உரைகூறித் தென்புலம், தமிழுலக மென்னும் பொருளுற நிறுத்திப்போகின்ற உண்மை சிந்திக்கப்பாலது.

மூன்றாவது செய்யுளிற் கூறிய ஊன்மிசைதல் என்ப தைத், தொல்குறி விளக்குந் தோலாமணி என ஆசிரியர் கூறி நிறுத்தியதற்கு இணங்கிய வுரை இரண்டு கூறிவைத்திருப் பதின் உண்மை ஓரத் தகுந்ததாம்.

நான்காவது செய்யுளுரையில் தொன்மறை மொழி என வும், 28-ம் செய்யுளில் மறைநுவல் தொன்மொழி எனற்கு நயம்படு முறையாகத் தொன்மறை மொழி எனவும் பொருள் கூறித் தொன்மறை என்பது தமிழ்மறை என அறிதற் பொரு ளில் வைத்துப் போந்தன்மை உய்த்துணரற் பாலதாம்.

ஏனைக் கலைகளின் முதனூலை மறையெனக் கூறிப் போதலை யுங் கண்டறிந்து கொள்க.

பதின்மூன்றாமதிகாரச் செய்யுள் கூறிய தூக்கத்தை நனவுநிலை, கனவுநிலை, அசைவற்றுநின்றநிலை இவையுணரற் கருவியென நிலையடக்கி வைத்தமைகாண, ஆசிரியர் கூற்றுண் மை விளங்க வைத்தது ஓர்ந்துணரப் பாலதாம்.

# முகவுரை.

குளர்ந்தையஞ் சேவ்வே ளிணைத்தா ளுளந்தர
வுன்னிவா யார வுரைத்துச்
சேன்னிமேற் கோள்ளுதுந் திகழ்தரற் போருட்டே.

மூவடி முப்பது என்னும் இந்நூலியற்றியவர் இடைக்காடனு ரெனும் பெரும் புலவரே யாம். இவரைப் பெரியாராக நாடுமுழுதும் இன்றுவரை பாராட்டி வருதலும் வெளிப்படையாகும். இவரது பாடல்கள் சொன்னயத்தோடு பொருட்செறிவு மிக்குடையனவாய்ச் சுருங்கச் சொல்லல் என்னும் அழகுபெற்று அகநானூறு, புறநானூறு, திருவள்ளுவமாலை முதலிய சங்கநூல்களில் மிளிர்ந்து வருவனவாதல் கற்றறிந்தார் யாவரு மறிந்ததே யாகும். இப்பாடல்கள் பெரும்பாலும் முல்லை, மழை, இடையர் தன்மையை வளம்பெறக் கூறுவனவாக விருக்கின்றன. இவையன்றியும் மூவடி முப்பதோடு ஊசிமுறி யென்னும் நூலும் கண்டு கேட்டறிந்த மக்கள் உவக்கக் கூடிய விருந்தாக வியற்றிப் புலவர்தம் வாய் குளிரப் போற்றக்கூடிய சிறப்போ டமைய நிறுத்தியதும் உலகம் வியந்து பாராட்டத் தக்கதாம். இவர் கற்ப வுடப்பு பெற்ற சித்தாயிருத்தல்பற்றிப் பெரும் பயனுறுவார்க்கென,

"சேரி மொழியிற் செவ்விதிற் கிளந்
தோதல்வேண்டாது குறித்தது தோன்றிற்
புலனென மொழிப புலனுணர்ந் தோரே."

என்றவாறு சேரி மொழியிற் கிளந்த புலனெறி நூலாக இடைக்காட்டுச் சித்தர் பாடல், இடைக்காட்டுச் சித்தர் ஞான சூத்திரம், இடைக்காட்டார் பஞ்சாங்க வெண்பா முதலிய நூல்களும் அருளிச் செய்துமுள்ளார். புலனறி நூல்கள் உலகறி வறிந்து உப்பாற் செல்வார்க் குறுதுணைக் கருவியாய் நின்று உதவி புரிவதா யிருத்தலான் அவை அத்தகு நிலைபெற முயலுவார்க்கே யாமென விடுத்து மற்ற நூல்களை யறியச் சிறிது கூற விழைகின்றேன்.

அதாவது மூவடி முப்பது, ஊசிமுறி என்னும் இரண்டுநூல்களிற் பின்னதாகிய ஊசிமுறி, எழுத்தாணிகொண் டெழுதப்பெறுத எழுதாக் கேள்விமேற்கொண் டெழுந்த பொருளடங்கிய பாடல்களினாகிய நூலென்பதாம். ஏனெனின் ஊசியெனுஞ் சொல் எழுத்தாணி என்னும் பொருட்டாய் அதுகொண்டு வரைதற்கியலாத பொருளுடையநூல் ஊசிமுறி எனப்பெறப்படுதல்பற்றியே யாம். அஃது என்ன பொருட்டாமோவெனின், செவியிற்கேட் டறிந்தவாறே குரலிடை நிறுவி வாயுறு செய்தியால் ஒவ்வொன்றின்பா னின்றெழூஉம் உரிய ஓசைபெறத் தாமொலித்துக் காட்டும் தன்மைத் தென்பதாகும். அவை யாவன:—எழிசையொலி, காற்றினோதை, கடலார்ப்போதை, மேகக்கடுங்குர லிடிப்போதை, மழைவீழோதை, கருவி

யினேணைச, மலையெதிர்கூவெலி, காற்றலம் போதை, கடுமா வோதை, புள்ளொலி, வண்டார்ப்பு, குருகியம்போதை, சங்கோதை, ஞெண்டோதை, இளமாவோதை, விழவரோதை, நகர்விசும்போதை, முதலாயினவாம். இத்தகைய நூல், ஏனைநூல்கள் போலாது வாயுற வொலிப்பாரின் மாபுவழியிற் கேட்டறிய வைத்த ஓர் தனிநூலாமென்பதும் கோடற் பாற்றும்.

இவ்வாறாக நூலோன் றியற்ற வல்ல இன்னிசையேழின் ஒலிநுட்பத் தெல்லைகண்டாரா யிருந்து வந்தாரென்பதை அறிதற்கென இருந்துவருஞ் செய்யுள் வருமாறு:—

"மாக்கடன் முகந்து மாதிரத் திருளி
மலர்தலை யுலகம் புதையவலை னேர்பு
பழங்கண் கொண்ட கொழும்பல கொண்மூப்
பொழிந்த போலப் பலவுடன் மின்னித்
தாழ்ந்த போல சொரிவன யியற்றி
யிடியு முழக்கு மின்றிப் பாணர்
வடியுறு நல்யாழ் நரம்பிசைத் தன்ன
வின்குர லழிதுளி தலைஇ நன்பல
பெயல்பெய்து கழிந்த பூநாறு வைகறை."

(374, முல்லை: இடைக்காடனார் அகநானூறு.)

இச்செய்யுட்கண்

"இடியு முழக்கு மின்றிப் பாணர்
வடியுறு நல்யாழ் நரம்பிசைத் தன்ன
வின்குர லழிதுளி தலைஇ நன்பல
பெயல் பெய்து"

என்ற வடிகளிற் காட்டிய மழைவீழோசையி னளவினை இன்னிசை யொலி யளவிற்கண்டு ஒலித்தல் பிழையா வவ்விசையொடு புணர்த்தி ஒலிப்பிரிவறுத்து ஒன்றேயாக யிருந்தமை கூறியவாறு காண்க. (இதன் பொருள்.) நல்லோசை பெறுநற் கோண்ட மரத்தின லமைதிபெற வாக்கியநல் யாழின்கண்ணே வரம்பறிந் திசைபாடுவோர் இசை யொலியளபுறுங்காறும் நரம்பின் மாடகந்திரித்து இன்னிசை யேழுமே நரம்பேழதாய்க் கிடந்தவாறதாக வடிகட்டி நிறுத்தி, அந்நரம் பின்தாலிற் றெறித்தெழுந்த கிம்ரட்ஜ ஒலியே போன்று கார்காலத் தோர்நா ளிரவில் இடியு முழக்க மில்லாது பன்முறை யிற் றுளிப்பெயலாகப் பெய்யத் தொடங்கிப் போகப் போகத் துளியி னளவழிந்து அணுவின் மெல்லிதாய்ப்போகி ஒய்ந்து போன மழை; எனக் கூறியமையானே ஒலியியல் நுணுக்க நிலைகண் டுணர்ந்த இடைக்காடனர் எனற்கு யாதொரு ஐயமு மின்றும். இதனல் ஒலியியறோர்ந் துலக முவப்ப இசைபெற நாட்டிய நூல் ஊசிமுறியா மென்க.

இது தவிரத் தலைப்பிலே முன்னதாய்க் கூறிவைத்துள்ள மூவடி முப்பது என்னும் இந்நூல், தமிழகத்தே தோன்றி நிகழும் அறங்கூறவந்த மற்றெவ்வகை நூல்களையும் போலாது அறிவிற் றெளிந்த ஆன்றோர் கருத்துட்கொண்டுள்ளவா றறிய வெளியுற நிறுத்தியதோர் அரிய நூலாகும். இதனை இவர் காலத்துக்கு முற்பட்டிருந்த ஆன்றோர் வாக்காற் றெளி வுற நன்கறிந்து கொள்ளலாம். அது வருமாறு:—

"யாதும் ஊரே யாவருங் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலுந் தணிதலு மவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே வாழ்த
லினிதென மகிழ்ந்தென்று மிலமே முனிவி
லின்னா தென்றலு மிலமே மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கு மல்லற் பேரியாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர்
முறைவழிப் படூஉ மென்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தன மாகலின் மாட்சியிற்
பெரியோரை வியத்தலு மிலமே
சிறியோரை யிகழ்த லதனினு மிலமே."

திணை-பொதுவியல். துறை-பொருண்மொழிக்காஞ்சி
192 கணியன் பூங்குன்றன் பாட்டு; புறநானூறு.

இச்செய்யுளில் சுருங்கக் கூறியுள்ள பொருளின் கருத்தையே உலகமறிந் தின்புறுமாறு, கடவுள் வகுத்தவற்றினை உயிர்கள் தத்தமியல்பிற் கேற்ற வழியே சென்று துய்த்து அவ்வழி யானே மேற்சென்றடைவு பெற்றுய்தல் கூடுமென்பதை சற்று விரியவைத்துக் கூறியது அறியற்பாற்றும்.

இந்நூல் கூறிய பொருள்களை, நான்கு கூறாக ஆக்கப் பெற்றுள்ளது. அந்நான்கனுள்ளே தலையாயது இன்பக்கூறு எனவும், அடுத்திரண்டாவதா யாகியது பொருட்கூறு என

வும், பொருட்கூறினை யடுத்து மூன்முவத ஞகியது அறக்கூறு எனவும், முடிபினின்ற நான்காவதாயகூறு ஒழிபு எனவும் பெறப்பட்டதாகும்.

அந்நான்கனுள் முதன்மைத்தான இன்பக்கூறு:—காமம், காமக்கிழத்தி, ஊன்மிசைதல், பொய்யுரை, நாணுமை என் னும் ஐந்ததிகாரங்களை முறையே யுடையது.

இரண்டாவதாகிய பொருட்கூறு:—கல்லாமை, புறப் பொலிவு, வியத்தல், நோநட்பு, குற்றங்காட்டல், நல்குரவு, கலக்கம், தூக்கம், பொச்சாப்பு, ஆசை என்னும் பத்ததிகா ரங்களை முறையே யுடையது.

மூன்முவதாகிய அறக்கூறு:—துறவறவிழிவு, கண்ணறுத் தல், ஈயாமை, கொடுமை, வெகுளி, போலிப்புறமொழி, கான் முளைப்பெருக்கம், கொலை, சூது, குடி என்னும் பத்ததிகாரங் களை யுடையது.

நான்காவதான ஒழிபுக்கூறு:—தற்றுணையாக்கம், பிணி, அழுகை, மூப்பு, சாக்காடு என்னும் ஐந்ததிகாரங்களை யுடை யது.

இந்நான்கு கூறுஞ் சேர்ந்து முப்பததிகாரங்களாய் அதிகாரமொன்றற்கு செய்யுளொன்முகவும் செய்யுளோவ் வொன்றிற்கும் அதிகாரத்தினுடைய பொருண் மும்மூன்முகவும் மூவடியான் முடிபுற வைத்த மூவடி முப்பது என்னும் பெயர்த்தாகி நின்றது என்பதாம்.

மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் கூறிய நாலடியானாகிய பாட்டு நாற்பதிற்கொண்டு முடிந்த 'நாலடி நாற்பது' என்னும் பெயரிய நூலைப்போன்று இம்மூவடி முப்பதும், பெயரிற்றோன்றக் கிடக்கின்றது. இந் நூலின் உண்மையைச் செய்யுள்தோறும் செவ்விதாய்க்கண்டு தேர்ந்து ஓரவைத்த உரையி னருமை பெரிதும் பாராட்டற் பாலதாம். இத்தகைய அரிய வுரையொன்று பெறப்படாது போயின் நூன்மூலத்தினும்பொருள் தெற்றெனப் பெறுதற் கிடர்ப்படூஉ மென்பதும் துணிபாம்.

ஆகலான், ஆசிரியர் நூலினது செய்யுட் டிறம் போகிய வாறே 'பருந்தும் நிழலும்போல்' என்ற தன்மையி னுரைத்த உரைத்திறமும் அறிந்தோர் பாராட்டத் தகுவதாகும். இத் தகைய உரைக்கண்ணே தமிழ்மறைக் கூற்றெனப் பொருள் பயப்பதாகவும், தமிழர் மரபு எனவும் தென்புலம் எனற்குத் தமிழுலகம் எனவும், இன்னும் தமிழ் மக்கள் பழக்க வழக்க மீதாமெனவும் நேர்ந்த விடத்திற் குறிப்புறக் காட்டிப் போவது, தமிழ்நல நுகர்ந்துவரு மக்கட்கு நல்லுரம்புகுத்தி ஊக்குவதாயுமுள்ளது. இவ்வரிய வுரையினை அளபுற வுரைத்த உரையாசிரியர் பேர், ஊர் முதலியன எவ்வாற்றானும் விளங்க வில்லை என்பதைக் கேட்குங்கால் இந்நூ லுணர்வார்க்கு, மிகவருத்தந் தருவதேயாகும். இன்பமும் பொருளு மறனு மென்றாங்கு (தொல்களவி-க) என்பதைக் கொண்டு இயல்பின் முறையாக அதிகாரம் வகுத்துக் கூறுபடுத்தி நிறுத்திய நூலாய்

முதலாவது இன்பமும் அதன் பின்பே பொருளும் இவ் விரண்டின் பின்னே அறனும் கூறிக் கடைசியில் ஒழிபென்ப தமைத்துச் செல்கின்ற பெருமை நோக்கின், இன்னூ லொன்றே இயல்பொடு கிடந்த வுலகத்தாரினியல்வழிக்கேற்ற பொதுநூலாய்த், தமிழொடு கிடந்த ஏனைமொழிநூலுக்கும் தமிழ்மொழி வழிவந்த நூலுக்கும் விருந்தாகிய நூலாய், மன்னிப் பொலிந் திலங்கிவரும் ஓர் தனிநூலென்பதற்கு யாதொரு ஐயமு மின்றாம். இந்நூலிற் சாதிசமயங்கள் எதுவுந் தோன்றாது கடவுளொன்றுண் டென்பது தோன்ற மறுநிலை கூறிச் செல்வது, ஆன்றோர் கொள்கையை வெளிப் படுத்தற் காகியது என்பதும் அறியக்கிடக்கின்றது.

ஊன்மிசைவதால் ஆண்மையும், தூக்கத்தால் தளர்வகற் றிப்பெறும் ஆக்கை வலிமையும், வளர்ச்சியும், குடியால் புதிய ஊக்கமும் தொழுநோயி னொழிபும் பெறக் கூடுமென்பதும், வெகுளித் தோற்றத்தால் ஆக்கைவலி இழந்த தன்மையும், வியப்பால் அகங்கிளர்வுறுவதும், உள்ளத்தே பெறக்கூடுமென் பதும் ; நல்குரவால் தேவுண்மை யுணர்வும், மூப்பால் உலகிய லோர்வு அறிவனூ லோர்வெனத் தமக்கேற்றவா வரப்பெறும் இருவகை யோர்வும், மரணத்தால் மன்னறிவுணர்வும், அறி விற் பெறக்கூடுமென்பதும்; மன்பதையாகிய உயிர்க் கின்றி யமையா உடம்பையும் உடம்பகவயினுகி உண்ணின்ற உள் ளத்தையும், உள்ளத்தி னுள்ளே நின்றோர்ந்துணரப் பெறுவ தான அறிவையும் தற்காப்புக்கு அரும்பொரு ளுரிமையாய்க்

கோடல் வேண்டியதென்பதைக் காட்டிப் போவது பெரிதும் போற்றத் தகுந்ததாகும்.

நூன்முதலாவதான செய்யுளின் றலைப்பிலே உலகம் எனத் தொடங்கி நூலிறுவாயினின்ற செய்யுளி னீற்றிலே வாழியவென முடியக்கூறிவைத்து ஆதியோடந்தமும் மங்கல மொழியுற நூல் நடைபெறுவது, அது கற்பார்க்காம்பயன் மங்கல முறுவதே யெனும் பொருட்டாய் நின்றதென்பதும் அறியத்தக்கது. ஆன்ற நன்மனத்தராய் நின்றோர்வார்க்கிந்நூ லான்ற பயனளிப்பதேயாகுங்கருவியாய் நிற்பதாமென்பதூஉம் அஃதில்லாற்கு ஏற்றவாறு பயனளிப்பதேயாகுங் கருவியாய் நிற்பதாமென்பதூஉம் உணரப்பெறுவதா யிலங்குவதூஉம் ஓரத்தகுந்ததாம். நிற்க;

இந்நூற் றொடக்கத்து முன்பாக மூவடி முப்பது எனத் தலைப்பிட்டதன்பாலே, 'இந்நூல் சங்கப் பலகையை நிலை குலைத்த இடைக்காடன் பாட்டு' என்று முன் மொழிந்து கொண்டு அதன் பின்பு நிலைகுலைத்த வரலாறு கூறப்பெற் றிருத்தலைக் காணலாம். அவ்வரலாற்றில் பொருத்தமுறக் கதை முடியாது போகின்றமைபால் இந்நூல், சங்கப்பலகை நிலைகுலைத்தற்கெனப் பாடியதாக ஓர் காரணமும் தோன்று தற்கில்லை என்பதே தமியேன் கொண்ட கருத்து.

சங்கத்தை நிலைகுலைத்த கதையாக வேறொன்று உலகத் தில் வழங்கி வருவது வருமாறு;—அக்காலத்தே சங்கப்புலவர்,

தமக்குர எவரும் நிகரின்றெனப் பலகையேறித் தருக்குற் றிருந்தனரென்றும் எத்திறத்தாராது பிறநூலும் சங்கத் தரங் கேறவொண்ணுது ஒரு முறைபிற் கேட்டபாடலை அவ்வாறே வரைந்தியும் எழுத்தாளரைக் காவரை ஒன்றமைத் திருத்தி அவ்வரை வழியான் அரங்கேறு பாடலைப் பழம் பாடலா மென எடுத்துக்காட்டி, எவரையும் தலையெடுக்க வொட்டாது செய்துவந்தாரென்றும் அவ்வுண்மை யறிந்த இடைக்காடர் சங்கத் தவைக்களமேறி, எப்பாடலும் பழம்பாட லாமாயின் பாடிக் காட்டுதிர்' என ஊசிமுறியை எழுத்தாணி வேலை முறியப் பாடி யரங்கேற்றினரென்றும் அன்றுமுதல் சங்கப் பலகையின் றிறம் நிலைகுலைந்தது என்றும் சங்கப்புலவர் திறமும், இடைக்காடர் திறமுமோரக் கர்ணபரம்பரையாக நாட்டில் ஓர் கதை வழங்கி வருதலையும் காண்க. ஆதலான் மூவடி முப்பது என்னும் இந்நூலை இம்முகவுரையின் முற் படக் கூறிப் போந்தவாறே வுயர் பொருளிற் கோடல் சால் பாம் என கூறி நிறுத்துகின்றேன்.

இதனால் இடைக்காடனாரும் சங்கப்புலவரும் புலமை யின் மிக்காரெனக் கூறும் பொருள்பெற, நவிறற்கு இருத்த லினாலே இடைக்காடனார்பாடிய, சங்கநூற்பாடல்கள், ஊசிமுறி இவைபோன்ற மூவடி முப்பது என்னும் இந்நூலும் சங்க நூலாம் என்பதோடு ஒருவாறோராக் கூறி நிறுத்திக் கொள் கின்றனன்.

மதுரஞ்-சுந்தரபாண்டிய ஓதுவார்,
மதுரை.

# நூன்முகம்.

---

1 மன்னுசீ ரொருவன் வகுத்தபல் லுயிர்க்கட்
டுன்னிய தோற்றமுந் திரிபுங் கேடு
மவற்றொடு துய்த்தலு மாவதி னீங்கா
யியல்பறி வார்க்குல கியலியல் பாகலின்
5 மாக்கள் மக்க ளென்றிரு பகுதியி
னுக்கைநே ரொன்றென வாகுயிர் வேறெனக்
காக்கப் படுமுயிர் கண்ட மனிதர்க்கு
ளிழிவெனக் கெடுத்தலு மேற்பெனக் காத்தலு
மழிவினு ளுயர்வென வாக்கலு மாங்காங்
10 இயற்றுதன் மேற்கொண் டியல்வரம் பறியா
துளுற்றுத லுயிர்க்கிட ருறுத்தலின் மறுதலை
யாவதா மென்பதை யாவரு முணர
வேற்பக் கிடந்ததொல் இயல்பினில் வழாது
பாற்படக் கிடந்தவா பகுதிநான் காக்கி
15 முற்படக் கிடந்த வின்பமுற் கூறு
யெற்பட வதன்பால் காமங் காமக்
கிழத்தியுன் மிசைதல்பொய் புரைநா ணுமை
வழுத்திய முறைபால் வகையைத் தாக்கியும்
இரண்டா வதன்பா லீரைந் தாகித்
20 திரண்டு பொருட்கூ றுவையெனத் திகழ்தா

கல்லா மைபுறப் பொலிவே வியத்த
லல்ல செய் நோா நட்பே குற்றங்
காட்டல்நல் குரவு கலக்கந் தூக்க
முட்டுபொச் சாப்பே யாசையிம் முறையிற்
25 தோன்றிநின் றியலுறத் தொடர்பினி னிறுத்தியும்
மூன்றாங் கூறறக் கூறெ‍ன முழக்கியாங்
குறவற விழிவே துலங்குகண் ணறுத்தல்
உறுவ தீயாமை கொடுமை யுளங்கவர்
வெகுளி போலிப் புறமொழி விழையத்
30 தகுவ தாகுங் காண்முளைப் பெருக்கம்
கொலையே சூதே குடியே யீரைந்
துலையா வகையுற வுறுமுறை யுறுத்தியும்
நான்கா வதன்கூ றேழிபெனுங் கூறுய்ப்
பாங்குறாஉந் தற்றுணை யாக்கம் படர்பிணி
35 யழுகை முற்றிய மூப்பே சாக்கா
டொழுகிய முறைவகை யோரைந் துணர்த்தியும்
மூவடி முப்பதென் றோர்நூல்
38 ஓவற விடைக்காட் டோனுட்டினனே.

இஃதுரைத்தார், இந்நூற்குக் குறிப்புரை உரைத்தாரும் முத்துமிழ்நா லறிஞருமாகிய மதுரை; மதுரஞ் சுந்தரபாண்டியனார்.

# பாயிரம்.

---

திருவரு ளுேக்கொடு திருந்திய நீர்மை
பொருந்திய புந்திசால் புனிதன் வகுத்தவற்
றிழிவென விலக்கென விடரென வேற்பென
வகற்ற முனைவது மழிய நேர்வதுங்
கழறற் கியைவதுங் கலங்கச் செய்வது
மிலம்பா டாதலி னியலறி மன்பதைக்
குளநிலை குணஞ்செய லுயர்நிலைக் கூக்குமின்.

இஃது உரைத்தார் இந்நூலாசிரியர் மாணாக்கரும் இள வலுமாகிய காக்கைச் சிறுபாடினியர்.

---

# மூவடி முப்பது.

இந்நூல் சங்கப் பலகையை நிலைகுலைத்த இடைக்காடன் பாட்டு. மற்றவர் எந்நிலை தலைகட்டிற்றேயானும், எந்நூல் பொலிந்து விளங்குமரே!! பொருட்செறிவு மிக்குடைமை யான் என்றவழி; அது நேர்ந்து அவற்றிற்கு எதிராய், "உதுக் காண், இவ்வுண்மையான் இவை தலை சிறந்தன; இப்பொருட் பெற்றி தேர்ந்து நம்நூல் இழிவுபட்டன காண்மின்" எனற்கு, 'இருங்குன்றத்து மருத்து மன்றத் துழையிருந்து' கண்டு *சான்றோர் முன் சொற்றது.

இந்நூல் மூன்றடியான் முப்பது சூத்திரங்களுடைமை யின் இப்பெயர்த் தாயிற்று.

இந்நூல் நுவல்பொருள் "அறக்கழி வுடையன பொருட் பயம் படவரின்—வழக்கென வழங்கலும் வழித்தன் றென்ப". [தொல்-பொருள்; உச.] 'உயர்ந்தோர் கிளவியும் வழக்கொடு புணர்தலின் வழக்குவழிப் படுத்தல் செய்யுட்குக் கடனே.' [தொல்-பொருள்; உரு.] என்பனபற்றி நிலைஇய வாயின.

---

* சங்கப் புலவரையொத்த வல்ல பிறவோர்.

கடவுள் துணை.

# மூவடி முப்பது.

## மூலமும், உரையும்.

---

## இன்பக்கூறு ; க.

---

### காமம் க.

1 உலகம் வழங்கலி னுயர்ந்தோர்க்கும் நேர்தலின்
*றென்புல மின்புறப் பின்முளை தோன்றலி
னன்பாக் கவனி வாழ்த்திமே லாளுமே.

க. காமச்சுவை ஒன்றுமே மன்பதை வளர்ச்சி கிளர்ச்சியொடு வழங்கல்.

உ. அறிவுடையோர்க்கும் இக்காமம் இயல்பேயாகத் தோன்றல்.

ங. உலகியல் நிறுத்தும் பொருண்மாபு அழியாது தமிழுலக வின்பம் யாண்டும் நிலைபேறுபெற நன்மக்களைப் பெறுதல்.

---

* தென்புலம் என்றது தமிழுலகினை. தென்றிசைக்கண் உள்ளதாகலான்.

ங. 'தமிழுல கைந்தும் தத்துவ மாமே' எனத் திருமந்திரம் கூறியபடி (இம்மைக்கும் மறுமைக்கும்) ஏற்ற பொருண்மரபுடைய இன்பம் இயைய உள்ள தமிழுலக நெறியிற் றுய்க்கும் இன்பமாம்.

## இன்பக்கூறு.

### காமக்கிழத்தி உ.

இம்மூன்றால் அன்பினைப் பெருக்கும் இவ்வுலகம் காமத்தினைத் தள்ளாது வாழ்த்தி எடுத்தாளும் என்க.

"இன்பமும் பொருளு மறனு மென்றாங்கு" [தொல்-களவி-க.] என்பதால் இன்பக்கூறு முன்னெடுத் தோதப்பட்டது.

"மூவடி முப்பது முதலாயின அம்மையெனப் படுமோ அழகெனப் படுமோ எனின் தாயபனுவலின்மையின் அம்மையெனப் படாது" [தொல்-செய்யுள் உ௩-பேரா-உரை.]

"தாயபனுவ லின்மையின் மூவடி முப்பது முதலியனவும் அழகின் பாற்படும்" [தொல்-செய்-உ௩-நச்-உரை.] (1)

### காமக்கிழத்தி உ.

இற்பொறை யுயிர்ப்பின் விருந்தா வேலலின்
பிற்படு தாரப் பெற்றியுகப் பாதலி
னின்னளெனு மூமொழி பேணலி னியல்பே.

## இன்பக்கூறு.

### காமக்கிழத்தி - உ.

க. கிழவோட்கு எழ்திங்கள் பூப்புநின்றவழிக் கிழவன் அண்மிச்சேறல் கூடாமையின், அதுதொட்டுக் கிழத்தி குழவி பெற்றுப் பொறையுயிர்த்த வறட்பூப்பு ஒட்டிப் பொலிப்பூப்பு ஆக்கம் அடையுந் துணையும், அவற்கணனுகி மனைக்கேற்பக் கூட்டம் நிகழ்த்தல்.

உ. கிழவோள் போகூழான் உரியோன்முன் பெரும் பிறிதுற்றவழி அவன் மாட்டணைந்து காலநிலைக்கொப்ப அவன் உணர்வு வழியொழுகல்.

ங. தலைவன் எழாட்டைப் பிராயத்தனுய் ஆடிவருங் கால் இருமுதுகுரவர் அவனுட்ட நீர்மை அடைவு கண்டு தம் நிலைக்கேற்பக் குலமண்மிய காதற்பாத்தைசெய் ஒன்றனைக் குறித்து, "நம் நம்பிக்குரியள் இந்நிலையிலுள்ளாள் இப்பெண் மகள்" என உரிமை விலையளித்து மங்கையராந்துணையும் வளர்த்து உரைத்த கடனை இவள் பேணி நிற்றல். (2)

---

உ. பெரும்பிறிதுற்றவழி என்றது சாக்காடு எய்திய பின் என்பதாம்

## இன்பக்கூறு.

### ஊன் மிசைதல் ௩.

தொல்குறி விளக்குந் தோலா மணியா
யுலைவி லாண்மை யொல்லே யளிப்பதா
யெல்லியன் முயக்க மிக்கூக் கும்மே.

க. பண்டைக் காலந்தொட்டு மக்கள் கையாண்டு வந்தமை காட்டுவது தோலாமணி. பிற்காலப் போலி வழக்கினால் இயல்திரிந்த தோல்வியுறாத அரதனம்.

உ. திரியாத வலியை, உண்ட அன்றே ஆக்குவது.

---

உல் ௩. ஏழாட்டைப் பிராயத்தனாய் ஆடிவருங்கால் என்றது, குலத்திற்கேற்ப காமக்கிழத்தி தன் மகற்கு ஏழாட்டைப் பிராயத் தொடக்கத்து வழக்கொத்து ஆடலாசிரியனிடம் இடுவித்து நீர்மைபெற அவன், கூத்துப் பயின்று அறையில் ஆடிவருங்காலை என்பதாம்.

அண்டவு என்றது ஆட்டத்தின் றன்மையிற் சிறிதும் பிழையாது பொருந்திய உறுப்புக்கள் ஒத்தியைத் தெளிவுற்றுக் குறித்த பொருளினை இற்றெனக் காணுமாறு பிடித்து நிறுத்திக்காட்டும் அடைவினை என்பதாம்.

இதனை நாடகத்தமிழ் நூல்களிற் கண்டறிந்து கொள்க.

## இன்பக்கூறு.

### பொய்யுரை ௩.

---

௩ காலப்பிணி முதலியவற்றான் ஆண்மை திரியின், அதனை ஒப்பக்கூட்டி *மகளிர் கூட்டம்பொலிவுற நிகழ்ந்து காப்பது. (3)

### பொய்யுரை ௪.

*அண்டா ருலகோர் கண்டதே கூறலி*
*னெண்டொடி முயக்கப் புணையெனச் செழித்துய*
*ரில்லற வாழ்விற் கேற்புரை யிதுவால்.*

௧. பட்டதே பட்டவா கூறலின் நல்லாரும் அண்டாது சேறல்.

௨. தலையாயர் ஒழிந்த ஏனைச் சங்கினியாதி மகளிர் நூலா கலிங்கம்-அருங்கலன் விழைந்து புலக்கின் புனைந்துரை கூறித் தெருட்டிக் கலவி சிறக்குமாறு பண்ணுகவென மறை விரித்தமை யறிதல்.

௩. மேனிலைக் குயர்த்தும் இல்லற வாழ்க்கையில் தீயூழால் ஆவாய் ஆளவிட்டி நிற்க, இருமுதுகுரவர் முதலியோர் பசியான் நலிய ஏற்புழி "இறப்பவரும் வழி ஏற்றவா செய்துய்க" என்ற தொன்மறை மொழியுட் கொண்டு அக்கால நிலைக்குத் தக ஒழுகுதல். (4)

---

* மகளிர் கூட்டம் என்றது பெண்கள் முயக்கத்தினையாம்

## இன்பக்கூறு.

### நாணுமை ரு.

கூட்ட நேர்விற் கிடர்ப்படை நாணே
தேட்டையு மொருக்கிச் செப்பமுஞ் சிதைத்தலி
னுரியபோழ் கோடா வுவக்குந ருரியரே.

க. காமநூல் தேராக்காளையர் மகளிர் முயக்க முறற்கு நாணே அடைகல்லாய் நிற்பது.

உ. ஆக்கந்தோன்றும் பன்னெறியினும் போந்து ஒர ஆண்மகன் அளவளாவற்கு ஒல்கி நிற்றல்.

ந. உலகிற்குரிய நேர்மை பரவுதற்கு முட்டாய் நின்று அதனைத் தவிர்த்தழிப்பதும் நாணேயாம்.

உரியோர்-மக்கட் பிறப்பினராய் உலகவாழ்விற்கு உரியோர்.

ஏற்ற காலத்தே நாணுராய் உலகிற் குவப்பினராய் நிற்ப ரென்பதாம்.

நாண் இழிமை கூறவே நாணுமையின் உயர்வு புலனுயிற்று.

(5)

க-வது இன்பக்கூறு

முற்றும்.

---

சல் உ. தலையாயர் என்றது பத்தினிப் பெண்டிரா என்பதாம்.

ஷிபுலக்கின் என்பது ஊடல்கொள்ளின் என்றதுவாம்.

ஷிபுனைந்துரை கூறி என்பது பொய்யினை, மெய்போலப் ஏற்பப் பொருந்தச் சொல்லி என்றதாம்.

ஷிமறையென்றது மதனுகமத்தினை எனக்கொள்க.

# உ-வது பொருட்கூறு.

---

## கல்லாமை சா.

தற்றக வினைக்கஞ் சாறலின் கேள்வி
முற்றலி னியற்கை யறிவே சிறத்தலின்
கற்பே விழுமியோர் கழறூர் தலையென.

க. நல்வினைக்கந் தன்னிலைக் கேற்பக் கூடியோங்குவது.

உ. தோட்ட செவியுடையார் பலர்கூறப் பன்முறை கேட்பது.

ந. இயற்கை யறிவுடையராய்ப் பிறப்பது.

இம்மூன்றுடைமையாற் கற்றல் ஒன்றே தலையாயது, கல்லாமை இழிவாயதெனக் கூறுர் பெரியோர். (6)

---

சல் ந. தொன்மறை மொழியென்பது தமிழ் மக்களின் பட்டாங்காகிய முதனூலாம் என்பதாம்.

## பொருட்கூறு.

### புறப்பொலிவு எ.

சிறுவாழ்விற் பெருந்துணை சீர்த்தியின் கந்து
பெரியோ ரவையினு மீதிட மளிப்பது
கரியாக் காண்டலின் றெருளொடு கொளலே.

க. தீயூழான் குடநீரட்டுண்டு அகத்தில் நலிவு பெரிதாயவழியுந் தன்னிலையின் மிகுந்து உயர்வு காட்டின், அது மறைவுறப் பொலிவாகத் தோன்றுவது.

உ. விழுப்பம் நிலையாய் நிற்றற்கு ஆடை, அணி, நடைகளினுற் புனைவு காட்டல் தக்க பற்றுசாக நிற்பது.

ந. தன்னிலையி லுயர்ந்தாரவையினும், தற்குறைவு நோக்காது ஒத்த உயரிய பீடத்தமரச் செய்வது. (7)

---

க-வது தீவினையின் வலியால் தமியனுகித் தண்ணீர் முதல் தானே எடுத்துச் சமைத்துண்ணுமாறு வீட்டில் ஒருவரும் இல்லா வறிய நிலையினும், அதனைப் பிறர் கண்டறியாத வாறுகத் தன்னைப் பிறர்மதிக்க உயர்த்திக் காட்டிக்கொள்ளும் புறப்பொலிவு.

## பொருட்கூறு.

### வியத்தல் அ.

ஆற்றல்பிற ரறிதலி னகங்கிளர் வுறுதலின்
கூற்றறி பாணர் கெழுமிய கோடலிற்
றேற்ற முறுகவே போற்றல்சால் வியப்பே.

க. தன் ஆற்றல் அறியாப் பிறர் அதனை உள்ளதாக வறிந்து வேண்டுவன அஞ்சி யியற்ற வருவாய் மெலியாது இயைந்தாவது.

உ. வியந்த அத்துணையே மனம் கிளர்ச்சியுற் றூக்கம் பெற வூக்கி விடுவது.

ந. சொற்றிற னறிந்து புகழ்ந்திசை பாடுவோர் பொலிந்த ஊதியம் பெற்றுய்யச் செய்வது. (8)

---

### நேரா நட்பு கூ.

காண்பகை யிறுக்கக் காறோர் துப்பாய்ப்
பார்க்கிணைப் பண்பாய்ப் பற்றிய கேண்மை
யார்சிறு தூதையா யாக்கம்விளைக் கும்மே.

க. தளர்வுறலான் நேர்ந்த அடாப்பகையினை யொடுக்கி மேம்படுக்கும் காலம் ஆராயும் கருவியாய் நிற்பது.

## பொருட்கூறு.

### குற்றங்காட்டல் ௰.

உ. நட்பின்றி அறிமுகமாய பலர்க்கும் உலகியற் கொத்து நொதுமலராய்ச் செப்பகம்போன்று ஒட்டியு மொட்டாது இயங்குவதாவது.

ங. தொடர்ந்த நட்பு மெப் நட்பாக அளந்தறி கருவியாய் நின்று ஆக்கம் தோற்றுவிப்பது. (9)

### குற்றங்காட்டல் ௰.

உறுப்பெற வாக்கிய வுறுவினை திருத்தலின்
வெறுக்கை பெருக்கலின் விளக்கங் கூட்டலின்
குற்றங் காட்ட றெற்றெனு துரைப்ப.

க. இடைக்கீடு வினைசெய்வோனுக்கு இழுக்கம் சுட்டின் அவனும் அவ்வினையும் நன்னிலைபி னுருப்பெற் றோக்கம் பெறுதல்.

உ. அவ்வோக்கம், வினைசெய்வோன் வருவாய் மிகுத்தி, உயர்வு கூட்டுவது.

ங. அத்தால் அவன் மிதுபுகழ் பெற்றுத் தூண்டுவோனளவு பயன்பெறக் கூட்டல். (10)

---

க. ஒக்கம் ஒங்குதல் என்னும் பொருள்வழி நின்றது.

உ. கூட்டல் என்பது மிகுத்தல் என்னும் பொருளில் நின்றது.

## பொருட்கூறு.

### நல்குரவு ிக.

ஈவேற் புண்மையா னிவ்வுல கியக்கலி
னேமனுண் பொருண்மலி நூல்பல வாக்கலின்
*றேவுண்மை யுணர்த்தலின் வாழிநல் குரவே.

க. உடையார், வறிஞர் என்றிரு வகைத்தாய இவ்வுல கில் ஈதலேற்றல் என்ற நிலைத்தொழிலாற் பெரியர் சிறியர் என்ற டீன்பதை தத்தம் நிலையினின்று ஒழுகச்செய்வது.

உ. பொருள் இன்றியமையாக் காலத்து அறிஞர் தந் நுண் ணுணர்வான், அச்குறை நிறப்பப் பொருண்மலிந்த நூல் பல அரசவையேற்குங் கையுறையா யாக்கஞ் செய்விப்பது.

ந. அன்று புறப்போந்து கொணர்ந்தனவே நோயாக் காய்ச்சற்கென வமைந்த காலத்தே வலிந்து போந்த பொருட் குவையானும், எதிர்நோக்கா தெய்திய வளனானும் இறை யுண்மை நல்குரவாளர் ஓரத் தெருட்டி விப்பது (11)

---

* தேவுண்மை வுணர்த்தலின் என்றது நாத்திகம் இன்மையாக ஆத்திகம் உண்மையாக உணரவைத்தல் என்பதாம்.

க. இவ்வுலகம், உடையர் வறிஞர் என்றிருவகையையுடை யது. அவர்கள்பால் ஈதல் ஏற்றல் என்ற தொழில்நிலை முறையே இருபாற் பட்டுளது. .அதனாற் பெரியரெனவுஞ் சிறியரெனவும்

## பொருட்கூறு.

### கலக்கம் ௧௨.

தெளிவின் வித்தாய்த் திறலறி வுறுப்பதை
நலம்பட நாட்டும் நெறிவிளக் காவதைக்
கலக்க மென்றே கழறுவ துலகே.

௧. கலக்கமின்றித் தெளிவு உருப்படாவாதலின் வித்து என்றார்.

௨. இன்மையின் ஒடுங்கிய தனாற்றல் இற்று என்பதை அறிவுறுத்துவது.

௩. அவ்வாற்றலோர்விளக்கமாக உன்னிய நன்னெறி சேர அடிகோலிவிப்பது. (12)

---

கூறுந் தகுதியுடையது. அதனால் இவ்வொழுகியலுள் நல்குரவும் ஒன்றாகி இயைந்ததாமென்க.

௧௧-ல் ௨. நல்குரவால் இன்றியமையாத பொருள் பல வேண்டப் படுங்காலத்தில் அவை பெறுதற்கான நூல் பல அறிஞரால் வெளிவருதலை யுடையனவாம் என்றோர்க. ஆக்கம் ஆகுதல் என்னும்பொருண்மேல் நின்றது.

௧௧-ல் ௩. நொய்யாகக் காய்ச்சற்கென வமைந்த காலத்தே என்றது, அரிசி கொண்டு அட்டுண்ணற்கு இன்மையின் குறுநொய்யுடன் நீர்ப்பெருக்கிக் காய்ச்சிய கஞ்சியே யுணவாக்கிக் கோடற் கியைக்தவறிதுற்ற கொடுமை படைத்த காலத்திலே என்பதாம். இறையுண்மை என்பது கடவுளுண்டு என்றதையாம் என்க.

## பொருட்கூறு.

### தூக்கம் ௧௩.

தளர்செகுத் தூனைப் புகுத்தலின் யாக்கை,
வளர்நெடி தாக்கலின் மறுநிலை யுண்டெனா
வுணரற் கருவியா யொருக்கலிற் பொலிகவே.

௧. மிக்க வினையான் உறுப்பு வலிதளர உறக்க முற்ற வழி புத்தாய உரந்தோற்றுவிப்பது.

௨. நோயான் மெலிந்த உறுப்புகள் அஃது ஒழிந்து முன்னிலைப் படுதற்கும் அப்பாட்டான் பல்லாண்டு மெய், நோயின்றி வாழற்கும் இடனு ஆக்கி வைப்பைது.

௩. 'கண்டதே காட்சி கொண்டதே கொள்கை என்ற இம்மை யொன்றே அறிவார், கனவொன்று உண்மையான், நனவொழிந்த பொறிபுலன் புடைபெயருழி பிறிதுநிலை யொன்றுண்டெனவும், அதனோடொழிந்த சுழுத்தியானே அறிவொழிந்த வினை அசைவற்று நின்றநிலை யொன்றுண் டெனவும் ஓர்ந்துணரற் கருவியா நிலையடக்கி வைப்பது. (13)

---

௰௨-ல் 'தெளிவின் வித்து' என வாசிரியர் கூறியது ஐயந்தோன்றியதின் பின்னே தோன்றுதலை என்பதனுன் என்றோர்க.

௰௩-ல் ௧. உள்ளகத்து ஒன்றுன்னியபின் அவ்வகமே அசைவுறுதலை யியல்பிற் கோடலின் கலக்கங்கோடலே தலை யாக்கொண்டு பின் அஃதற அசையாது வாளாவிருத்தலே உன்னி யது முடிந்த பயனுதுந் தெளிவென்பதாம்.

௰௩-ல் ௨. இற்று என்பது இத்தன்மைத்து என்னும் பொருளாம்.

## பொருட்கூறு.

### பொச்சாப்பு ௧௪.

வினைவல பாங்கர்க் கியல்பட் டடையா
முனைத்தெழு வுளைவீர் மருந்தா யாக்கை
யிணைவினை மறைத்தலி னேற்கவிவ் வுலகே.

௧. தலைவர்க்கு உழையராகி வினைசெய்வோர் இழுக்க முறல் இயல்பேயாக, அவ்விழுக்கம் ஒன்றே அவர் மனதில் முனைத்துத் தலைப்படாவாறு காப்பித்தல்.

௨. அருமருந்தன்ன சேயாதியரைக் காதலிப்போன் ஒருவன் நீயூழான் அன்னோரை யிழக்க நேர்வுழி அவன் மனத்து உறுத்தும் இன்னலைத் தணிக்கும் மருந்தாய் நிற்றல்.

௩. இறுதியினுந் தன்யாக்கை யழிபோக்கு ஒன்றனை யே நினைந்து நிற்போனுக்கு, உலகியல் வழங்காது பொலிவு அழியுமாகலின் அப்போக்கினை யவன்மனத்து நினைப்பூட் டாமே தடுத்து ஒழிப்பது. (14)

---

௩-ல் நனவொழிந்தபொழுது, கனவொன்றமே ஆண்டு நனவே போல உள்ளதாகக் காணவிருத்தலின் இவ்வுலகநிலை யன்றியும் பிறிதொரு நிலையும் உண்டெனக் கொள்ளற் கிருத்தலானும், கனவோடியைந்த சுழுத்திக்கண் பொறிபுலன் யாவும் அசைவின்றி எஞ்சி நின்ற அறிவாய நிலையொன்றுண்டெனக் காட்டும் காட்டு

## பொருட்கூறு.

### ஆசை ௫.

சீர்த்தித் துணையே திளைப்பூற்றுக் கோலே
பெருக்கச் செவிலியே யென்றவி னிம்மையே
யாசைப்பேற்றினை யடிப்படை யாக்குமால்.

க. மக்கட் பிறப்பினர்க் கெச்சமாய ஒப்புர வளிப்பான் நேரும் மிகுபுகழ்க்குத் தொடக்கத்தே தோன்றும் ஆசையே துணையாகி வளர்வது.

---

ஒன்று கொண்டிருத்தலின் உப்பானின்ற அசையாத் தனி நிலையினைப் பெறக் கீழற நின்று காட்டும் கருவியென அமையும் அளவில் அடக்கமுடையது தூக்கம் என்பதாம் என்றோர்க.

இதனால் மன்பதை பெறுதற்குரிய ஆத்திகம், தூக்கவழி முறையான் நிறுத்திக்கூறியது, அறிந்து கோடற்பாற்று மென்க.

௫ இச்சூத்திரத்தில் வைத்த மூன்று பொருட்கும் ஏற்ற சொற்றொடர்நயம் நினைப்பில் வைக்கத்தகுவதாக சீர்த்தித் துணை, திளைப்பூற்றுக்கோல் பெருக்கச் செவிலி எனக்கூறியது ஆசிரியரது புலமையின் நற்றிறம் புலப்படுத்தக் கூடியதாமென்க.

௫-ல் க. ஊன்றுகோல் ஊற்றுக்கோல் என வலித்தல் விகாரம் பெற்று நின்றது.

## பொருட்கூறு.

### ஆசை ௰ரு.

௨. பொருட்பேற்றின் பயன் போகந்துய்ப்பாதலின் அத்துய்ப்பிற்குச் சார்பாக நின்று மனநிலே தளரா துறுதி படுத்தும் கொம்பாய் நிற்றல்.

௩. எய்ப்பில் வைப்பாகப் பெரும் பொருளீட்டங் கருதினர் உள்ள மோக்கமுறு மாறடிப் படை யாவது. (15)

௨-வது பொருட்கூறு முற்றும்.

---

௰ரு-ல் ௨. ஆசிரியர் பெருக்கச் செவிலி என்றது ஆசையை அது செல்வம் வளர்தர வைத்துக் காக்கும் செல்வத்தின் தாய் என்னும் பொருளில் நின்றது.

அதனே எய்ப்பில் வைப்பாக நின்ற பெரும்பொருளீட்டம் என உரையாசிரியர் கூறியவற்ருற் காண்க.

செல்வத்தின் றலைவியைப் பெருக்கு நாச்சியார் எனத் திருமகட்கு இட்டு வழங்கி வந்தமையைப் பாரிபறம்பின் ருழ்வரைக் கண்ணே கண்ட பல கோயில்களுள் ஒன்ருகப் பெருக்கு நாச்சியார் கோயில் எனவும் அக்காலந்தொட்டு ஆண்டுள்ளார் கூறி வரும் வழக்கத்தை இன்று சென்றுங் கண்டறியலாம் என்க.

சீதேவி கோயிலும் மூதேவி கோயிலும் ஒருங்குசேர ஆண்டிருத்தலே அறிய அங்குள்ளார் யாவரும் அருக்கு நாச்சியார் பெருக்கு நாச்சியார் கோயில் என இரண்டினேயு சேரக்கூறிவரும் வழக்காலும் கண்டறிந்து கொள்க.

## ௩-வது அறக்கூறு.

---

### துறவறவிழிவு ௰௬.

மெய்யினை யருநெறி மேற்றூய்ப் பைஞ்ஞில
மலைவாய் வயங்கலிற் சிறுவரை விலங்கின்
பனைத்துணை யாழ்த்துநீ ருடைமையின் வரைபவே

௧. துறவறம், யாக்கை நலிவுறுத்தும் போற்றற்கரிய பல்வேறு நெறியுடைத் தாவது.

---

இதனானே செல்வத்தின் செவிலித்தாய் ஆசையா மென்பதூஉம், நற்றாய் திருமகளா மென்பதூஉம் பெறப்பட்டமை காண்க.

௰௬-ல் ௧. மெய்யினை என்றது ஆக்கையினை நலியவைக்கும் (நெறி) என்னும் பொருட்டாம்.

௰௬-ல் ௧. ஆசிரியர் அருநெறி என்று கூறிவைத்ததை போற்றற் கரிய பல்வேறு நெறி எனும் பொருளிற்கூறி உரையாசிரியர் வைத்தது யாது பற்றியோவெனின், இல்லறம் மேம்பட்டதாக நிகழ்தற்கு நன்னெறி பலவும் வேண்டற் பாற்றாக எவ்வாறு உள்ளதோ அஃதே போன்று துறவறமும் நிகழ ஆண்டும் பல்வேறு அருநெறி உண்டாம் ஆகலானும் அந்நெறியெல்லாம் அகத்தே புக்கு ஒருமனம் வைத்து நெறிநாட்டம் ஒன்றேயாகி இடங்கண்டு இலக்கு வைத்து அவ்விலக்கிற் றொடங்கி மிக நுண்ணியதாய் நின்ற நாடியின் றாம்பகத்தே ஒருங்கிச்சென்று

## அறக்கூறு.

### துறவறவிழிவு யகூ.

உ. உலகோர் பலர்க்கும் பெருமலைவாய் நின்று சொல்லொணுத் தயக்க முறுத்துவது.

---

தும்பிறுவாயி னீங்கி மேலிடம் ஒன்றுகாண நின்றவாறே போன்று முறையே கண்டடைய வேண்டியதெல்லாம் அடையப்பெறுவார்க்கே பெறுவதாயிருத்தலானும் அங்ஙனம் அருநெறிபலவற்றுள்ளும் சென்று முடிவின் முடிவொன்றுமின்றி நின்ற செம்பொருணிலை காணப்பெறுவதே யாகலானும் அந்நிலை மெய்தப்புறத்துறவு முகற்கண் வேண்டற்பாலது ஆகலானும் அப்பான் மேற்கூறிய எல்லா அருநெறியும் அகத்தேகண்டு துய்த்துச் சலிப்பெய்தி உணர்ச்சிநிலை மேலாக அகத்துறவுற்று அப்பாலுஞ் செல்ல வேண்டியதாகலாலும் ஆங்குச் செல்லுங்காலையும் அறியுமறிவொன்றே தானுகி அருள்வலியின் ஈர்ப்புத்துணையே பற்ருசாக நின்று மேற்செல்ல வேண்டுமெனப்படுவதானும் இல்லறத்துக்கப்பாலும் அறங்கடந்த உப்பாலைக்கு இப்பாலுமாக இடையே உள்ள துறவறம் அணுவளவினும் பிழையாது காத்துக் செல்வார்க்காம் அருநெறி மேற்றஎன பெறலரிதுகாட்டி இழிவுகூறிப் போந்தவகை, இதனுன் உணர்க வென்பதாம்.

உ. அவ்வருநெறிக் கட்புக்குச் சேறற்கு மாட்டாத மலைப்பிணி உலகினர்க்கு ஈந்து தயங்கி மயங்கிப் போமாறு செய்வது.

## அறக்கூறு.

## கண்ணறுத்தல் ௧௭.

---

௩. ஐவாய வேட்கையிற் கடுகளவு தவறுறுவோரைப் பனையளவு தாழ்நிலைப் படுத்திவிப்பது. (16)

---

## கண்ணறுத்தல் ௧௭.

போவாய் பொங்காப் பொருளுறை யுழியா
வாய்மையின் வித்தா நம்பகச் செவிலியா
ஞேய முறுத்தலிற் கண்ணறை நீரதே.

௧. ஒக்கமுறப் பொருளின்றி யமையா தாகவின் கொன்னே இறுக்கும் செல்மட்டாக்கி அதுதிரனும் வைப்பாய் ஞேயமுறுத்தல்.

---

௩. ஐவாய வேட்கை என்பது மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐவாயினூருக எழுந்த வேட்கையை; வேட்கை துறத்தலே துறவெனப்படுதலின் கடுகளவு தவறினும் பனையள விற் கீழுறத் தாழ்ந்துபோமாறு சென்றாழ்த்திவிடுமென்பதாம்.

சிறுவரை விலங்கின் என்றது ஒரு சிறிதளவு அந்நெறிக் கட்டவறினும் என்பதாம்.

கண்ணறுத்தலே ஆசிரியர் பொருளுறையுழி எனவும் வாய்மை யின் வித்து எனவும் நம்பகச் செவிலி எனவும் கூறிய சொற் றொடர் மொழித்திறம் குறிப்பிடத் தக்கதாம் என்க. கண்ணறை என்றது ஒருபாற்கோடாது யாவர்க்கும் பொதுவாய் ஞேயமுற உரையும் நடையும் ஒத்துவாய்மையுற நிற்றலே என்பதாம்.

## அறக்கூறு.

### கண்ணறுத்தல் மஎ.

உ. உரியார் மாட்டுக் கண்ணோடி ஒரோவழி நெறி விலங்குதல் உலகியல் உண்மையின், அஃதின்றி யாவர் மாட்டும் உரைநடையொத்து வாய்மைப் பயிர்முளைத்தெழ ஞேய முறுத்தல்.

ங. அங்ஙனம் ஒருபாற் கோடாது நிற்றலான் உல கோர் அவனைக்கப் பொலிவுண்மை நம்பி யொழுக ஞேய முறுத்துவது. (17)

---

மஎ-ல் க. போவாய் பொங்காப் பொருளுறையுழி! என்ற மையினுனே போந்தும் போருளுறையுழி எனக்கண்ணுறுத்தலை அமையக் கூறிவைத்தமை கண்டு கொள்க.

மஎ-ல் உ. கலக்கத்தைத் தெளிவின் வித்து என்றாற்போல கண்ணறுத்தலை வாய்மையின் வித்து எனத் தாம்கூறி நிறுத்திய வாறும் காண்க.

மஎ-ல் உ. ஆசையை பெருக்கர் சேவிலி என உரிமை பெறக்கூறி அமைத்து வைத்தாற்போல கண்ணறுத்தலை நம்பகச் சேவிலி என ஈண்டும் அமையக் கூறிவைத்தமை கண்டறிக.

## அறக்கூறு.

### ஈயாமை ௰அ.

தானே செய்வினை தான்றாய் கருவியாக்
கைத்தில் பொருந ருரையிட ரீர்த்துத்
தக்கில் கொடைப்பயன் றடுத்தாட் கொளுமே.

௧. அம்மை தீய விழைத்தானுக் கியைந்த பயனை அவனே துய்க்குமாறு பண்ணுதல்.

௨. காலத்தாற் பொருளற்றார், 'ஏற்பான் மாட்டில் லெனும் மொழியுரையாமே தடுத்து நிற்றல்.

௩. போலி வேடங்கொண்டு ஒரோவழி மருண்டு செய் யும் அபாத்திர தானத்தால் ஈவோனடையும் தீப்பயனை விலக் குவது. (18)

---

'தன்வினை தன்னைச்சுடும்' என்ற மூதுரையினை தானே செய்வினை தான்றாய் கருவியா என்ற செய்யுட் டலையடி எடுத்துக் காட்டியமை ஓர்க.

௰அ-ல் ௧. அம்மை-முற்பிறப்பு.

௰அ-ல் ௩. தக்கில் கொடை என்றது தகுதியில்லாதார் தம் போலிவேடத்தை மெய்யென மருண்டு அவர்க்கீயும் தீதாங் கொடையினை.

## அறக்கூறு.

### கொடுமை ௰௩.

மறியெறி கொடுவரி தன்பற ழோம்பலு
மாசுகளை கட்டி யாளவு மமைச்சை
யோர்ந்துகோ ணிரவு முன்னிலென் கொடுமையே.

௧. உயிர்பிழைத்தோடு நவ்விமறி யொன்றனை யெறிந்த புலி தன்னன்புசால் பறழ்க்கு ஊன்றடி யளித்தோம்பல்.

௨. குடியலைக்குங் கோளரை யரசன் பிணித்துக் கொலைப்படுத்தித் தன்வரையாளல்.

௩. அமாத்தியர் ஒருவரை அரசன் றேர்ந்து கோடற்கண் உபதை நான்கானும் புறத்தோற்றம் பொலிவாக ஆணுவுரை கூறி, வஞ்சித்தாளும் உயிரெச்ச உபதையுட் படுத்தல்.

(19)

---

௰௩-மறியெறி கொடுவரி, தன்பறழோம்பலைச் செய்யுளின் றலைக்கண் வைத்து ஆசிரியர் கூறியது இயல்பினை வலியுறுத்தி எடுத்துக் கூறிய தன்மைத்தா மென்க.

## அறக்கூறு.

### வெகுளி உ௰.

மெய்யுர னில்குணம் வெகுளியே யத்தாற்
சிறியரைக் கடிதலுந் தீமையச் சுறுத்தலும்
பெருமை பேணலும் பெறுதலி னன்றே.

வெகுளி, யாக்கை வலியற்றோர்க்குரிய இயல் எனத் தோற்றுவாய் கூறினர்.

க. அதனால் தன்னின் இளைத்தார் தன்னை நலிக்கா வண்ணம் கடிந்தோச்சுதல்.

உ. சோற்கமையுந் தீங்கு தம்மேற் படாவாறு அச்சுறுத்திவிடல்.

ங. மெலிந்த தன்னிலையைப் புறங்காட்டாது பேணி நிறுத்தல். (20)

## அறக்கூறு.

### போலிப்புறமொழி உக.

கால்கலப் பிறுத்தலிற் காட்சி தெரித்தலிற்
தோண்மெலி வுடையோர் தோழனு யியங்கலிற்
போழாப் புறமொழி போற்ற னன்றரோ.

க. ஒழுக்க மற்றோன் ஒருவன் கண்ணே ஒருவர் அவன்போம் நெறியினைப் பட்டவா சொல்லின், அப்போழ்தே அவ்விருவர்க்கும் இயையும் கைக்கலப்பினைத் தவிர்ப்பது.

உ, அறிமுகமுடையோர், நொதுமலர், பகைவர், நட்டோர் என்ற நால்வகை யினர்பால் உலகியற்கேற்கும் ஒழுக்கொடு சேற உரைமொழி காட்டுவிப்பது.

ங. வலியோர்க்கு எதிரா மெலிந்தா னொருவன் உள்ளக் கொதிப் பாற்றற்குத் தோழமை பூண்டு நிற்பது. (21)

---

உக-ல் உ. போலிப் புறமொழியை தோண் மெலிவுடையார் தோழன் என்றது கவனித்தற்பாலது.

ஆசிரியர் இவ்வாறு அருவாகி நின்றவற்றினை எடுத்துக்கூறி தெளியவைத்தற் பொருட்டு செவிலிமே லேற்றியும் தோழன்மே லேற்றியும் திறம்படக் கூறிவருதலைக் காணுங்கால் உலகிய லறியக் காட்டிய பொருண் மாபினை நுண்ணிதின் ஓர்ந்த பெருந் திறத்தின் போற்றலை, அஃதறிந்தாரும் ஏனையோரும் கண்டு வியந்து நூலினைப் போற்றற்கு உணா வைத்தமையும் புலனாதல் கண்டோர்க.

## அறக்கூறு.

### கான்முளைப் பெருக்கம் உஉ.

ஏவ விடம்பொரு ளிணங்கா துளைதலி
னீன்றோ ளிளைப்புற் றழுந்தலின் மன்பதை
யோய்ந்துவலி மழுங்கலி னொரூஉம் வழக்கிதே.

க. பெற்ற குழவியைப் பேண வியமும், செய்யும், வைப்பும் இன்றித் தலைவன் கொன்னே மனமுளைதல்.

உ. குழவியீன்றோள் மெய்நொந்து பிணியாற் றளர்ந்து இளைப்புற் றோய்தல்.

ந. மன்பதை வீரியந் தளர்ந்து உடலூக்குன்றி அறிவாண்மைகளி லொடுங்கல். (22)

---

### கொலை உங.

நெறிவிலங் கானீர் மக்களை நிறீஇ
யிடுசில பலியீத் தெறிமீன் புண்மா
பல்கியிங் குறுத்தாப் பாங்கறி கொலையே.

---

உஉ-ல் ஏவ விடம் பொருள் மூன்றினை வியமும் செய்யும் வைப்புமெனக் கூறி உரையாசிரியர் நிறுத்தியது காண்க.

உங-ல் ந. எறிமீன் என்றது சுறுமீனை. புள் என்றது தீப்புள் எனப்படும் நெருப்புக் கோழி முதலிய கொடும்பெரும் புள்ளினையாம்.

## அறக்கூறு.

### கொலை உ௩.

க. மன்பதை புறநெறி புகாது செந்நெறிப் படருமாறு தத்தம் நிலையில் நிறுத்துவது.

உ. பழிபுகு முறையிற் புகாது தெய்வத்தின் முன்னர் சில்பலி செய்து இம்மையிலாம் பயன்கொள நிறுத்துவது.

௩. நீர்ச்சுறவு, தீப்புள், கொடுவிலங்காதி பொங்கிப் பல்கி உலகை நலிக்காவாறு வேட்டத்தால் அவற்றை அளவு படுத்தி வைப்பது. (23)

---

உ. சில்பலி யீந்து சிறப்பாற்றித் தெய்வம் போற்றலும் பண்டைக்காலச் தொட்டுவருர் தமிழர்தம் உலகத்துக்கொண்ட மரபுவழியின் முறையாம் என்பதும் ஓர்க.

௩. ஆசிரியர் காலத்து கடற்கண்ணும் பாலை நிலத்துக்கண் ணும் கலத்தினும் நிலத்தினுஞ் செல்வாரை ஆண்டாண்டுச் சுறு மீன் கடற்சிங்கம் முதலியவும் தீப்புள்ளாய உருவிற் பெரிதான செருப்புண் பறவை அண்டப்புள் முதலியவும் இயங்கும் கொடு விலங்குகளும் மிகையாகி உலகை வருத்தாது அளவாகு நிலையில் வைப்பதாம்.

அதனால் கொடுவிலங்காதி மலிந்து மிகாது வேட்டத்தால் அளவிற் படுத்தி வைப்பதேபோல் நீரினும் பிறநிலத்தினும் செல் லும் மன்பதை, வருந்தாது போய்ச்சேரக் கொடுமீனுதி யவையும் கொடும் பெரும் புட்களையும் வேட்டஞ்செய்து மிகாது சிறுத்தல் அக்காலத்தவர் தம் கடப்பாடாம் என வழக்கிற் கூறியுள்ளமை குறிக்கற் பாலதாம்.

## அறக்கூறு.

### சூத்து உச.

அலையுளம் நிறீஇ யோர்முக மூர்த்தலிற்
சீர்நடை யடைவாற் றெருட் டலின் வல்லுகைப்
பறிவாக் கம்பெற வூக்கலி னிலைஇய.

௧. ஏர்ச்சியாற், பல்லாற்றானும் படர்ந்து கலங்கும் உள்ளத்தினை ஒருமுகப்படுத்தி வைத்தல்.

௨. ஆயத்தடையும் வென்றி தோல்விகளால். ஆக்கத் தலைவி ஒருபால் நிலைத்திராள் என்ற ஓர்மையுண்டாக்கல்.

௩. இட்ட விருத்தம் செப்பனுற வல்லு நாய்களை இணைப்பு எடுப்பாடச் செய்வதால் அறிவு ஒக்கமுறுத்தல். (24)

---

௧. ஓர்முகம் ஊர்த்தல் என்றது ஒருமுகமாய் மனம் பதிந்து மேனிற்றலை அல்லது ஓர்முக எழுச்சி எனலும் பெறும். தெருட் டலின் என்றது தெளிவித்தலினால் என்பதாம். ஊக்கலின் என் பது ஊக்கம் அளித்தலின் என்னும் பொருளி னின்றது.

௨. ஆயம்-சூதாங்கு ஆக்கத்தலைவி என்பது திருமகள்.

௩. இட்டவிருத்தம் என்றது பாய்ச்சிகை கைக்கொண்டு தாம் குறித்து விளம்பி நின்றவாறு இட்டு விழுந்த விருத்த முத விய தொகை எண்ணுக்களையாம் என்றோர்க.

## அறக்கூறு.

### குடி உரு.

விருந்தா வூக்கம் விளைத்தலின் வேண்டாத்
தொழுநோய் துடைக்குந் தொன்முறை மூலியை
விண்விழை துப்பினை மாண்ஞோரும் விழைப.

க. உண்டோர்க்கு புதுமைத் தொடர்பா யூக்கமுண்டாக்குதல்.

---

க. விருந்தா வூக்கம் என்பது புதிது புதிதாய்த் தரு மூக்கமாம். தொழுநோய் என்பது குறைநோயாம் இது பதினெண் குட்டத்துள் மிகக் கொடிதாகிய குட்டமாம் என்றோர்க.

* குடி என்பது பனங்கட் குடியினை.

வேண்டாத் தொழுநோய் என்பது நோயுற்றோர் தமதுடம்பை வேண்டாது வெறுத்தலே போன்று உற்றோரு மற்றோரும். காண வெறுப்புறும் நோயாமென்க. இக்கொடிதாம் நோயினை "அங்க மெலா மழுதொழுகு தொழுநோய்" என அப்பர் சுவாமிகள் தேவாரத்திற் கூறியருளினமையும் காண்க. இந்நோய் தீர்த்தற் கென்றே பண்டைக்காலந் தொட்டே மருத்துவம் அறிந்த ஆன்றோர் கற்மூலியாகத் தெரிந்துணர வைத்திருத்தலை நூலாசிரியரு மருத்து மன்றத் திருந்து மருந்தாராய்தலிற் றெளிந்து கண்டு

அறக்கூறு.

குடி ௨௫.

௨. பிறர்நோக்கற்கும் விரும்பாத் தொழுநோயுடையோர்க்கு அது விலங்கும் கற்பமூலியாவது.

௩. வேள்விக்கண் ஈயும் குடியினை விண்ணோரும் விழைப வாதலின் மண்ணோரும் விரும்புதல். (25)

௩-வது அறக்கூறு

முற்றும்.

---

வைத்தமை "வேண்டாத் தொழுநோய் துடைக்கும் தொன்முறை மூலியை" என்ற உண்மையானே நன்கறிய கிடப்பதூஉம் காண்க.

௨. விலங்கும் என்பது அகலும் என்னும் பொருட்டாம்.

௩. விண்ணோர் குடிவிழைதல் ஆரிய நூலிற் காண்க.

# ச-வது ஒழிபு.

---

## தற்றுணையாக்கம் உசு.

தாமே தமக்கிக லுறவெனத் தேர்ந்து
மேன்மேற் கிளர்வொடு செந்நெறி படர்மி
னென்னே யறிவன் றுணைகா லாடினே.

க தாம் செய்யும் வினையே தமக்கு வீக்கமும் மெலி
வும் அளித்தல்.

உ. அறிஞர் அவ்வுண்மை தேர்ந்து தளராது அகத்
தெழும் கிளர்ச்சி யுடையராதல்.

ந. செப்பம் அமைந்த வினையொட்டி யியங்கல்; அங்
ஙனம் இயங்கின் இறைவன் துணைகாலாடுகாலைப் பொருந்தி
ஆவது என்னே என்பதாம். (26)

---

## பிணி உஎ.

புரிந்ததன் கழுவாய் புரியாது விலக்குணி
மருத்து நூன்மா றுறுத்துநன் மணியாம்
பிணியுமிப் புவியி னிலவுபான் மையதே.

க. பொறியுணர் நுகர்வே பெரிதுடைய ராயினர்
வேட்கையான் உந்தப்பட்டு நெறிவிலங்க அத்தால் நேர்ந்தன
பிணிப் பீடிப்பாற் பிராயச் சித்தமா வாக்கிக்கோடல்.

## ஒழிபு.

### பிணி உஎ.

உ. தீமைப் பயப்பன விழைக்காமே எதிர்காலத்து அன்னோர் நேர்வழிநிற்க அடைகல்லாகி நிற்றல்.

---

பிணியை ஆசிரியர் புரிந்த தன் கழுவாய், புரியாது விலக்குணி, மருத்துநூன் மாணுறுத்து நன்மாமணி யெனமூன்று பொருளுறச் சொற்பெயர் மூன்றமைத்துக் கூறிவைத்தமை காண்க.

இம்மூன்றனுள் முதலாவதான புரிந்த தன் கழுவாய் என்பது புரியொணாதன புரிந்தவற்றான் வந்த பிணி, புரியொணாதன புரியாமை கொண்டு நிற்றலை உணர்த்தியவாறு காட்டியதாமென்க

இரண்டாவதான புரியாது விலக்குணி யென்பது மேற் கூறியவாறு புரியொணாதன புரிந்ததனா னேர்ந்ததை மேலும் புரியாது விலங்கிச் செல்லுமாறு விலக்கி நிற்றலை உணர்த்தியதா மென்க.

மருத்துநூன் மாணுறுத்து நன் மாமணி யென்பது மனிதர்து உயிர்வாழ்விற்கு இன்றியமையாதது உடம்பேயாமென்பதும் அவ்வுடம்பும் தளராது வளரக்காத்து வருதன் முறையானே உயிருங்காக்கப் பெறுவதாயாகி நீளஇருந்து வருதலினானும் உடம்பழிய நேர்வது பிணியானே யாகலானும் அந்நேர்ச்சியில் உயிரும்போய் விடுதலினானும் அவ்வுயிர்க்காப்புக் கின்றியமையா நூலாகி நின்றது மருத்துநூலாகலானும் அந்நூலும் நிலநீர்காற்றிவற்றின் அல்லாதன செய்தகேட்டாலும், உணவிடை வந்த கேட்டாலும் கெட்டவுணவின் வந்தவூனின் கேட்டாலும்

## ஒழிபு.

### பிணி உஎ.

ந. தீர்க்கவொண்ணாதவற்றையும் தீர்ந்தவற்றின் பயன் நோக்கிப் பிணியின் றொடக்க நடுவீற்றினை ஒப்பு நோக்கித் தீர்க்கும் மருத்துவநூற் பழக்க வழக்க முறைநோக்கிப் பல்கி வருதல். (27)

---

கேடமைந்தவூனினின்று தோன்றிய வுள்ளத்தின் கேட்டாலும் ஆகியது பிணியா மென்பதை வலியுறுத்தலை மேற்கொண்டு பிணிக்கு மருந்துகூறிப் போவதாலும் மனிதர் உள்ள காலங்கா றும் பிணியுண்மை காண நிற்றலான் யாவரும் போற்றப்படுவ தாகியது மருத்துநூ லென்பது வெளிப்படையாகலானும் பிணி மேம்பாடுறநின்ற மருத்துநூல் அறியவைத்த நன்மாமணி பிணி யாமென்பதை உய்த்துணர்ந்து கொள்க.

பிணியு மிப்புவியி னிலவு பான்மையதே என இச்சூத்திர வீற்றடி கூறிப் போந்தமையால் மேற்கூறிய மூன்றும் இப்புவி யின்கண் யாண்டும் நிலவுவதாம் பான்மையுடைத்து என்பதை உய்த்துணர வைத்தமை காண்க.

ந. அசாத்திய நோயெனினும் அவற்றையும் முன்றீர்த் துக்கண்ட பயனோக்கி பிணி தொடக்கத்துற்றவாறும் நடுவாய போழ்து வெளிப்பட்டுநின்றவாறும் இறுதியில் இத்துணைத்தென ஆனவாறும் மருத்துநூலிற் கண்ட நோய் வரலாற்றிற் கொப்பக் கண்டு நாடி யியல்பு முதலியவற்றால் இற்றுகுமென உறுதிபெறக் கொண்டு நோய் தீர்க்கு மருந்து ஈதாகுமெனவே துணிந்து செய்முறை கைமுறையாகிய வழக்க நெறிநின்று கண்ட மருந் தினை நீக்கம் நிறைப்பு ஒப்பு ஓர்ந்து கொடுத்து வருதலினு லென் பதாம்.

இம்மருந்து:—தேவுறை, மக்களுறை, சூருறை என மூன் றனு ளடங்கு மென்பதாம்.

## ஒழிப்பு.

### அழுகை உஅ.

உறுதுயர் தடுக்குநர் பெருந்துணை யுய்வின்
மறமீர் கழுவாய் மறைநுவல் தொன்மொழி
யம்மூன் றுடைமையி னழுகைபு மியலவே.

க. உள்ளத் துயர் அடுத்துள்ளோன் பக்கல் பரிவுரை யாடியேனும் வாய்விட் டழுங்கியேனுமன்றி அகலாதாகலின் மானம் இறப்ப வரும்வழி ஒல்லெனப் பொங்கிய துயர் ஒழிப் பார்க்கிதுவே துணையாதல்.

---

அழுகையை ஆசிரியர் உறுதுயர் தடுக்குனர் பெருந்துணை, உய்வின் மறமீர் கழுவாய், மறைநுவல் தொன்மொழி என முப் பொருள் விளங்க அமைத்து வைத்தமை காண்க.

அம்மூன்றனுள் முதன்மைக் கணின்றது உறுதுயர் தடுக் குனர் பெருந்துணை என்பது; எனெனிற் றடுத்தற் கொண்ணாது, துயரம் மேன்மேலும் பொங்குற்று ஆற்றொணாத் துயராகி அகப் பட்டாளை ஆழ்த்துங்காலை அதிற்றப்பித் தெளிதற்குற்ற துணை யாக நின்றது வாய்விட்டழுங்குதலே யாம்.

இரண்டாவதி னின்ற உய்வின் மறமீர் கழுவாய் என்றது உரையாசிரியர் கூறியவாறு தீயவை தீர்தல் என்பதனிற் சார்ந்து உய்வின் மறம் என்னும் பிறவித் துன்பிற் சேர்க்கும் 'அறம் பாவ மென்னும் அருங்கயிற்றாற் கட்டுண்டு' என்னும் இருவினையா னெருக்குறுவதுபட்டாராய் மறஞ்செய்தேமெனக்கண்டு இரு வினைத் துயரொழிப்பான் றொடங்கி உய்ந்து போதற்கு வழிகாண முயன்றுமறியாராகிப் பேரிடர்ப்படற் காற்றாது செய்வதொன்

## ஒழிபு.

### அழுகை உஅ.

உ. ஆன்முலையறுத்தல் அந்தணர் நலித்தல் முதலிய பெரும்பிழை செய்தோரும் தம்பிழையுணர்ந்து மனம் அழுங்கின் உள்ளம் பதிந்த அரிட்ட வித்துகள் சிறிது சிறிதாக வகலுமெனல் சான்றோர் கோளாதலின் மறமீர் கழுவாயாதல்.

ங. பெரும் பிறிதுற்ற எற்புச் சட்டகமீது சொட்டுக் கண்ணீரேனு மிட்டன்றி நன்காடனுப்பல் தகாதெனத் தொன்மறை நுவலலின் அதற்குந் துணையாதல். (28)

---

றறியாராய் 'அழுதா லுன்னைப் பெறுவேனே' என்றபடி மேனோக் குற் றழுமழுகையுமாம் என்பதும் அறிக.

மூன்றாவதி னின்ற மறைநுவல் தொன்மொழி என்றது உரையாசிரியர் நன்கு தெளியக் கூறியதான தொன்மறையின் மொழியென்பதாம். அம்மொழிதான் இறந்து பட்டாரது பிணத்தின்மேல் ஒரு சொட்டுக் கண்ணீரேனும் விழ வீழ்ந் தழாது முதுகாடு சேர்த்தல் கூடாதென்பதாம். இதனாற் றொன்மறையென்பது இருக்கு, யசுர், சாமம், அதர்வமென்னும் வடநூல் மறை நான்கும், நாடுபுகுதற்கு முன்பே நமக்கென்றா தொன்றுதொட்டிருந்துவந்த தமிழ் மறையாமெனப் பொருள் கொள்க. எனெனின் மக்கள் தோன்றிய காலந்தொட்டு நாடு வழங்கிவருந் தாய்மொழியாகிய தமிழ்மொழி எனும் பொருள் தோன்ற நின்ற தொன்மொழி எனக் கூறியவாற்றானும் என்க. ஆசிரியர் இடைக்காடனார்காலம் கடைச்சங்க காலமாகலின் அக்காலத்தே வடநான்மறை தமிழுலகத்தே புக்கு மக்கள்பால் விரவிநின்ற தன்மை கண்டு புதுமை யீதெனவும் பழமை யீதெனவும் அறியவைத்த தொன்மொழி என்பதை உணர்ந்து தேர்க.

## ஒழிபு.

### மூப்பு உகூ.

இருவகை யோர்வு மேற்றவா வுணர்தலின்
சிறியோர் போற்றுஞ் சீர்த்திறன் குடைமையின்
பரிவுமுளை யெழுதலின் பாத்திய பாலதே.

க. தாமறிந்த உலகியல் ஞானமும் அறிவனூலுணர்வுங் கண்கூடாகத் தம் நீண்ட வாழுளுட் செய்கையிலுங் கண்டுண்மை தேர்தல்.

உ. கான்மர மெனினும் முதுமை நோக்கிப் போற்றுக வெனும் தமிழர் மரபுநோக்கிப் பெரியோரை அவர்தம் அறிவு, உரு, ஆற்றல்களில் இளைய பல்லோர் மிகப் போற்றித் துதித்தல்.

---

இருவகை யோர்வு மேற்றவா வுணர்தலின் என்றார் ஆசிரியர். இருவகை யோர்வு எனற்கு உலகியல் ஞானம் அறிவனூலுணர்வு என உரையாசிரியர் கூறியதில் உலகியல் ஞானம் என்பது சிறு பருவத்தேயிருந்து காண்டல், கேட்டல், புரிதல், துய்த்தல் என்பதனுல் பெறப்படுவதாம். அறிவனூலுணர்வு என்பது, உலகியல் ஞானம் பழக்க வழக்கத்தாற் றடிப்புண்டு முற்றிப்போயதாகிப் பின்பு காண்டலாதிய பழயனவாய், அவ்வுணர்வு கழிவுறுங் காலைத் தோன்றுவதாகி நின்றது அப்புறத்தாகிய அறிவின்முளை

## ஒழிபு.

### மூப்பு உகூ.

௩. இரக்கம் தோன்றும் காணியாக மூப்பு நிற்றலின் இளைய ஏனையர் வன்னெஞ்சுடைய ரெனினும் அது நோக்கிப் பரிவு கோடல். (29)

---

யென்பது. அம்மூளைத்தோற்றம் வளர்தற்கும் வளர்ந்து பயனெய்துவதற்கும் பற்றுசாக நின்றது அறிவனது முதனூலாம். அவ்வாறு அறிவனூலுணர்வு பெற அஃது பெற்றாரைப் பேணிக் காண்டல், கேட்டல், புரிதல், துய்த்தலிவைகொண்டு வாழ்தலிற் பெறுவது அறிவனூலுணர்வாம்.

இவ்விருவகை யோர்வு மேற்றவா வுணர்தலின் என்றமையான் 'அவரவர் வினையில் அவரவர் வருவார்' என்றதற் கிணங்க வினைக்கேற்ற வுடம்பும், உடம்பிற்கேற்றதான வுள்ளமும், உள்ள மேற்பதற்கேற்ற வுலகவியலும் பொருளும் பொருளின்றுய்ப்பும் தீவகத்தும் கண்டத்தும் தோன்றியுள்ளார் ஆங்காங்கு ஏற்றவா வுள்ளவாறு பெற்று அவரவர் உணர்ந்துகோடற் காவதாய் நின்ற இருவகை யோர்வெனக் கூறி உலகியல் ஞான முன்னதாய் உண்மை ஞானம் பின்னதாய் வருவன பெறுதற்கிடனுகி நின்றது மூப்பெனக் கூறியது காண்க.

## ஒழிபு.

### சாக்காடு ௩௰.

மன்னறி வுறுத்தலின் மன்பதைக் கிம்மையின்
றுன்புற வொழித்தலின் றொல்லுயிர் துணிந்த
வின்புறு புத்துட லிசைத்தலின் வாழிய.

க. பேறிளமை யின்பங்களால் ஏமாப்புறும் மன்ப தைக்கு முடிவு ஒன்று உண்டௌன அறிவுறுத்துவது.

உ. உலகோர் ஆற்றாது அல்லலுற் றழுங்கும்வழி அவர் துயர்க்கடலாகிய இம்மை முடித்தற்கு இஃது ஓர் கருவி யாவது.

---

இச்சூத்திரத்திற் கூறிய மன்னறி வுறுத்தலின் என்றது மன்பதை மூப்பதனிற் பெற்ற இருவகை யோர்விற் சிறந்தான அறிவனூலுணர்வே மேம்பட்டதாய் முன்னின்று உலகியல் ஞானம் வாதனையாக்கண்டு விடுத்தல் பெறுதற்கும் யாண்டும் பொய்க்காது நிலைபேறு பெறுதற்கும் துணையாகி மன்னிநின்ற தாதலான் மன்னறிவு எனக்கூறி அஃதுறுத்தற்கு இடனாக நின் றது சாக்காடு எனவும் கூறியது காண்க.

உ. மன்பதைக் கிம்மையின் றுன்புற வொழித்தலின் என் றது உலகோர் தம் இம்மை வாழ்வு இன்புறும் வாழ்வெனக் கூறு தற்கில்லாது 'இன்றுநன்று நாளைநன்று என்றுநன்றென் றிச்சை யாய்ப் பொன்றுகின்ற வாழ்வு'எனத் துன்புறும் வாழ்வாய், வாழ்வு பொன்றிப் போதலிற்கண்ட துன்புறவொழித்தலி னின்றது சாக்காடு என்பதாம்.

## ஒழிபு.

### சாக்காடு ௩௰.

௩. அங்ஙனம் முடித்தார் உடம்பு விலங்குங் காலத்து அடுத்தவினை தோற்றுவிக்கும் கதியுட்சென்று புத்துடல் பெறப் பிறிதோர் இன்ப வுலக வாழ்க்கைக்கு அடிகோலி விடுப்பது. (30)

---

௩. தொல்லுயிர் துணிந்த வின்புறு புத்துட லிசைத்தலின் என்றது அநாதியாகத் தோன்றிய வுயிர் துணிந்தது இன்பமே யாகலான் அவ்வின்பம் 'பிறவா ருறுவது பெருகிய வின்பம்' என்ற பேரின்பமே எனப் பெறுதலான் அவ்வின்பம் விளைவெய் தித் துய்த்தற்குப் பிறவிதோறும் இன்பமென வருஉஞ் சிற்றின் பத்திலே பயின்று தேறி முடிவி வின்பம் எய்துதற்குப் படியாக வரும் கதியுட்டோன்றிப் புத்துடலில்வரும் இன்பம் பெறுதற்குத் தம்முன்னாக வந்து நிற்பது சாக்காடு என்பதாம்.

மாணம் மன்னறி வுறுத்தலினானும் மன்பதைக் கிம்மையின் றுன்புறவொழித்தலினானும் தொல்லுயிர் துணிந்த இன்புறு புத்துட லிசைத்தலினானும் ஆசிரியர் வாழியவென வாழ்த்தி முடித்தமையுங் காண்க.

௩௰-க. மன்னறி வுறுத்தலின் என்றதை 'யாதேனும் பிறப் பஞ்சேன் இறப்பதற்கு என்கடவேன்' என்று மாணிக்கவாசகர் அருளிய வாக்கானும் காண்க.

## ஒழிபு.

### சாக்காடு ௩௰.

௨. "பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம்" என மணி மேகலை கூறியவாறு இம்மையின் றுன்புறவு என ஆசிரியரும் கூறியது காண்க.

௩. பிறவாமை பெறநின்றார் உடம்புபெற்று இன்போடியைந் திருத்தலைப், 'பிறவா ருறுவது பெரும்பே ரின்பம்' என்ற மணி மேகலை கூற்றிற் கிணங்கப் தொல்லுயிர் துணிந்த வின்புறு புத் துடல் இசைத்தலின் என ஆசிரியரும் கூறியது காண்க. இத னைத் திருவாசகமும் "எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம் பெருமான், மெய்யேஉன் பொன்னடிகள் கண்டின்ப வீடுற்றேன்" என அருளிச்செய்தமையும் ஓர்க.

இந்நூலின் றலைப்பாட்டின் றொடக்கத்து 'உலகம்' என மங்கல மொழியினெடுத்து இயங்கவைத்து இறுதிப்பாட்டின் இறுதியில் "வாழிய" என்னும் மங்கல மொழியொடு நிறைவுற நிறுத்தி

ஆசிரியர் இடைக்காடனார் கண்ட மூவடி முப்பது
மூலமும் உரையும் முற்றிற்று.

உ

# மூவடி முப்பது.

## செய்யுண் முதற் குறிப்பு அகராதி.

# மூவடி முப்பது

## மூலமும் உரையும்.

அருஞ் சொற் பொருளகராதி முதலியன

[முதலாவது எண் பக்க எண்; அடுத்த எண்வரியின்எண்.]

அ

அபாத்திரதானம்—தகுதியில்லார்க்
கீயுங்கொடை 21, 12.
அமாத்தியர்—மந்திரிகள் 22, 11.
அமைச்சை—மந்திரியை 22, 5.
அம்மை—வருபிறப்பில் 21, 7.
அரசவை—இராஜாங்கசபை 11, 12.
அரிட்டவித்துகள்—தோடமுலங்கள் 34, 6.
அருங்கலன்—பேரணி 5, 14.
அருநெறி—அகத்தேயுள்ள அரியநெறி 17, 4.
அலையுளம்—அலைகின்றமனம 27, 4.
அவனி—உலகம் 1, 9.
அவை—சபை 8, 5.
அழிபோக்கு—நாசமாவது 14, 13.
அழுங்கின்—வருந்தின் 34, 5.
அளவிட்டி—அளவுகுன்றி 5, 18.
அறிவன்—இறைவன் 30, 6.
அன்னோரை—அவர்களை 14, 11.

ஆ

ஆக்கத்தலைவி—திருமகள், 27, 9.
ஆடல்தொடங்குபருவம்—ஆண், பெண் இருவரும் நாட்டியம் பயிலத்தொடங்கும் பருவம்; அது ஏழாட்டைப் பிராயமாம். 3, 12.

ஆ



இ

இ



ஈ



உ

உ

உய்வு—பிழைப்பு 33, 4.

உரம்—வலிமை 13, 8.

உரிமை வில்—பரியம் 3, 16.

உரியோன்—கணவன் 3, 9.

உரைநடை—சொல்லும் நடத்தையும் 20, 6.

உரையிடர்—துன்பாக வருஞ்சொல், 21, 5.

உலகம்—மன்பதை 1, 7.

உலைவில்—கேடில்லாத 4, 5.

உழையர்—பக்கத்திருப்பவர் 14, 7.

உளைதலின்—வருந்தலால் 25, 4.

உளைவு—உளையும் வலி 14, 5.

உறுப்பு—அங்கம் 13, 7.

உன்னிய—நினைத்த 12, 10.

ஊ

ஊக்கிவிடுவது—மேலேற்றிவிடுவது 9, 11.

ஊதியம்—இலாபம் 9, 13.

ஊழ்—முன்வினைப்பயன் 3, 9, 15, 11.

ஊற்றுக்கோல்—ஊன்றுகோல் 15, 4.

ஊன்றடி—ஊனுகிய புலவினை 22, 8.

எ

எச்சம்—மிகை 15, 7.

எய்ப்பில்வைப்பு—குறைவற்ற செல்வம் 16, 7.

எல்—இரவு, 4, 6.

க

கன்னறை—கன்னறுத்தல் 19, 9.

கண்ணேடி—ஓர் பால் நோக்கி 20, 4

கதி—நிலே 35, 8.

கந்து-பற்ருசு 8, 4.

காப்பித்தல்-மறைத்தல் 14, 9.

கலவி-புணர்ச்சி 5, 15.

கலிங்கம்—ஆடை, 5, 14.

கழறுவது-சொல்வது 12, 6.

களேகட்டி-களேயை யொழித்து 22, 5.

கற்பு-சுற்றல் 7, 6.

கனவு-ஸ்வப்பனம் 13. 13.

கா

காட்சி—காணும் தன்மையது 24, 4.

காணி-இடம் 36, 4.

காமநூல்—மதனுகமம், 6, 7.

கால்கலப்பு-கைகலப்பு அதாவது சண்டையாம் 24, 4.

கான்முளேப் பெருக்கம்—மக்கட்பெருக்கம் 25, 3.

கி

கிழத்தி—மனையாள் 3, 5.

கிழவன்—கேள்வன் 3, 4.

கிழவோள்—மனைவி, 3, 4.

கிளர்வொடு—கிளர்ச்சியுடன் 30, 5.

த

தலையாயர்—பத்தினிப பெண்டிர் 5, 13

தற்குறைவு-இழிவு 8, 12.

தன்வரையாளல்—தன்கீழ்ப்படுத்தி
ஆளுதல் 22, 10.

தா

தாழ்நிலை-தாழ்ந்த இடம் 19, 5.

தான்றுய்கருவி—தானே துய்க்கும்
கருவி 21, 4.

தி

திரணும்வைப்பு-திரசொத்து 19, 11.

திரன்-வல்லமை 9, 12.

திரியாத வலி—மாறுபடாத வலிமை 4, 10.

திளைப்பு—போகந்துய்த்தல் 15, 4.

திறல்—வலிமை 12, 4.

தீ

தீயூழ்—கெடுவிதி, 5, 17. கெட்ட
வினைப்பயன் 14, 11.

து

துணைகால்—இணையடி 30, 6.

துப்பு—உளவுக்கருவி 9, 15.

தெ

தெரித்தல்—விளங்கல் 24, 4.

தெருட்டி—தெளிவித்து 5, 15.

தெருட்டிவிப்பது- தெளிவிப்பது 11, 16.

தென்புலம்—தமிழுலகம் 1, 8.

தே

தேட்டு—தேடியசொத்து 6, 5.

தேர்ந்து—தெளிந்து 30, 4.

தேவுண்மை—ஆத்திகம் அல்லது கடவுள் உண்டென்பது 11, 6.

தொ

தொல்குறி—ஆதிகாலத்திலிருந்து வருவதென்பதைக் குறிக்கும் குறி 4, 4.

தொழுநோய்—பதினெண்குட்டத்துள் ஒன்று 28, 5.

தொன்மறை—தமிழ்மறை 5, 20.

தொன்மறை நுவன்மொழி—தமிழ்மறை கூறுகின்ற மொழி அதனை 34, 38-ல் இருந்து காண்க.

தோ

தோட்டசெவி—(துளைப்பட்டசெவி 7, 8.

தோண்மெலிவுடையார்—ஒருவற்கு எதிராகி நின்று வலிமையிற் குறைந்தவர் 24, 5.

தோலாமணி—தோல்விபெறு அரதனம் 4, 4.

ந

நட்டோர்—உறவினர் 24, 10.

நம்பகம்—நம்பிக்கை 19, 8.

நவ்விமறி—நவ்விமான் 22, 7.

நலிய—வருந்த 5, 19.

ந

நல்குரவாளர்—வறிஞர் 11, 6.

நல்குரவு—வறுமை 11, 13.

நனவு—ஜாக்கிரம் 13, 14.

நன்மணி—உயர்ந்த மாணிக்கம், 30, 16.

நி

நிறீஇ—நிறுத்தி 25, 14.

நெ

நெறிவிலங்கல்—நெறிதப்பிப்போதல் 20, 4.

நெறிவிலங்கா நீர்மக்கள்—நன்மக்கள் 25, 14.

நெறிவிளக்கு—நெறிகாட்டும் விளக்கு 12, 5.

நே

நேராநட்பு—ஒவ்வாத்தோழமை 9, 14.

நொ

நொதுமலர்—அயலார் 24, 10.

ப

படராவாறு—பொருந்தாதபடி 23, 11.

படை—படுத்தல் அல்லது அடிப்படை 6, 4.

பட்டடை—அடைகல் 14, 5.

பட்டவா சொல்லின் பரிவுரை–உள்ளவாறு வாய்விட்டு கூறும் துன்புரை 24, 7.

பல்கி—அதிகமாய் 25, 16.

(புலிப்) பறழ்—(புலிக்)குட்டி 22, 4.

பனைத்துணை யாழ்த்தும்—பனையளவமிழ்த்தும் 17, 6.

பா

பாங்கு—பான்மையுடையது 25, 16.

பாணர்—பாடகர் 9, 5.

பு

புடை பெயருழி—எழுமிடத்தில் 13, 4.

புத்தாய—புதிதான 13, 8.

புத்துடல்—புதியசரீரம் 37, 6.

புரிந்த—செய்த 30, 15.

புலக்கின்—ஊடல்கொள்ளின் 5, 14.

புலன் ஆவது—சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் இவை
யறியும் ஐம்புலன் 13, 14.

புறங்காட்டாது-பின்காட்டாது 23, 13.

புறப்பொலிவு-ஆடம்பரம் அல்லது
மதிப்புமேடும் 8, 3.

புனைந்துரை—ஏற்புரை 5, 14.

புனைவு-அலங்காரம் 8, 11.

பெ

பெருக்கச்செவிலி — செல்வத்தை வளர்க்கு செவிலித்
தாய் அல்லது ஆசை 15, 5.

பெரும்பிரிதுற்றவழி—இறந்தவிடத்து 3, 10.

பே

பேணல்—விரும்பல் 23, 6.

பை

பைஞ்ஞிலம்—பசியபூமி 17, 4.

பொ



போ



ம

வா

வாய்மை—உண்மை 19, 8.
வாழிய = வாழக்கடவதாக 37, 6.

வி

வின்விழைதுப்பு—விண்ணோர் விரும்பும் உணவு 28, 6.
வியம்—ஏவல் 25, 7.
விருத்தம்—சூதாட்டக்கருவியிற் பெறும் எண்ணினத்தில் ஒன்று 27, 11.
விருந்தா ஊக்கம்—புதுமைதொடர்ந்த ஊக்கம் 28, 4.
விலக்குணி—அகற்றுவிப்பது 30, 15.
விலங்கின்—விலகின் 17, 5.
விழுப்பம்—மேலானது 8, 10.
விழுமியோர்—மேலோர் 7, 6.
விழைப—விரும்புவார்கள் 28, 6.
வினைசெய்வோர்—வேலைக்காரர் 14, 7.

வெ

வெகுளி—கோபம் 23, 4.
வெறுக்கை—செல்வம் 10, 10.

வே

வேட்டம்—வேட்டை 26, 9.

வை

வைப்பு—சொத்து, 25, 7.

அருஞ்சொற் பொருளகராதி முதலியன
முற்றியது.

---

# பிழை திருத்தம்.

| பக்கம். | | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| பதிப் | 1 | 8 | புறப்பாரின்றி | புரப்பாரின்றி |
| | 1 | 12 | புறந்து | புரந்து |
| | 2 | 2 | பெருந்தகமைக்கு | பெருந்தகைமைக்கு |
| ஆ. வர | 6 | 12 | யிருந்தார் | விருந்தார் |
| | 6 | 13 | கெதிராய் தோன்றி | கெதிராய்த்தோன்றி |
| | 6 | 14 | இரங்கிவரும் | இறங்கிவரும் |
| | 16 | 18 | வெம்மைக்காக சற்று | வெம்மைக்காகச்சற்று |
| | 7 | 7 | பட்டவராய் சித்தர் | பட்டவராய்ச் சித்தர் |
| | 7 | 10 | வாளாதிருக்க | வாளாவிருக்க |
| | 7 | 14 | தூய்த்தாமாறும் | தூய்தாமாறும் |
| | 7 | 15 | கானற் கரிய | காணற்கரிய |
| | 13 | 6 | சிவங்காட்டி | சிவங்காட்டித் |
| | 13 | 9 | கானம்மாளுய் | காணம்மாளுய் |
| | 13 | 16 | தோன்றி | தோன்றித் |
| | 14 | 9 | பாங்குற் | பாங்குற |
| | 14 | 14 | செரிவுற்று | செறிவுற்று |
| | 14 | 22 | துணையாகதம் | துணையாகத்தம் |
| | 15 | 19 | நல்கு | னல்கு |
| | 15 | 23 | அறிய | அரிய |
| | 16 | 16 | மிக்குற்றூராய் | மிக்குற்றூராய்ப் |

| | பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| | 17 | 7 | தொடங்கின | தொடங்கின. |
| | 18 | 14 | உருக்கெண்டெழுந்து | உருக்கொண்டெழுந்து |
| | 19 | 4 | பேருரை | பேரூரை |
| | 20 | 13 | ஆராய்ச்சினும் | ஆராய்ச்சியினும் |
| அ-குறி. | 2 | 6 | மரபென கூறியது | மரபெனக் கூறியது |
| | 2 | 11 | பிரிதோர் | பிறிதோர் |
| | 2 | 12 | அப்பிரிதோர் | அப்பிறிதோர் |
| | 2 | 13 | விடத்து தூக்கத்து | விடத்துத்தூக்கத்து |
| முக | 3 | 2 | கூவெலி | கூவொலி |
| | 4 | 5 | யிருந்தமை | விருந்தமை |
| | 4 | 15 | ஐயுமு | ஐயமு |
| | | குறிப்புரை வரி. | | |
| | 6 | 3 | மெய்போலப் | மெய்போல |
| | 11 | 9 | ஒழுக | ஒழுக |
| | 11 | 11 | நிறப்ப | நிரப்ப |
| | 11 | 11 | மலிந்தறூல் | மலிந்தநூல் |
| | 12 | 9 | தனாற்ன்றல் | தன்னாற்றல் |
| | 13 | 11 | வைப்பைது | வைப்பது |
| | 16 | 13 | இரண்டிணையுசேர | இரண்டிணையுஞ்சேர |
| | 17 | 6 | வைத்ததை போற்றற் | வைத்ததைப்போற்றற் |
| | 18 | 6 | முகற்கண் | முதற்கண் |
| | 18 | 14 | எனபெறல | எனப்பெறல் |
| | 27 | 1 | ஒருமுகம் | ஒருமுகம் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| மு. உ 28 | 7 | உண்டோர்க்கு புதுமை | உண்டோர்க்குப் புதுமை |
| குறிப்புரை வரி. | | | |
| 28 | 8 | அங்கமெலாமழு தொழுகு | அங்கமெலாங்குறைந் தொழுகு |
| 28 | 11 | கற்மூலி | கற்பமூலி |
| 29 | 2 | நன்கறிய | நன்கறியக் |
| 31 | 2 | நன்மாமணி | நன்மணி |
| 31 | 12 | ௸ | ௸ |
| 32 | 6 | ௸ | ௸ |
| 33 | 1 | தடுக்குனர் | தடுக்குநர் |
| 35 | 7 | பழயன | பழையன |

உ

முருகவேள் துணை.

## மதுரஞ்-சுந்தரபாண்டிய ஓதுவாரவர்களின்
# முக்கிய வெளியீடுகள்.

---

### செங்கோன்றரைச் செலவு மூலமும்-உரையும்

இது, தலையூழித் தலைச்சங்க நூல். தாப்புலித்தொடாராகியது. செங்கோ என்னும் வேந்தன், தலையூழிக் கண்ணிருந்தவன் ஆவன். இவன், கடல்கொள்ளப்பட்டதான எழுநூற்றுக் காவதம் தூரமுள்ள நாற்பத்தொன்பது நாடுகளினிடையேநின்று பெயர்ந்து, வட விமயத்தே ஏற்றுக் கொடிநாட்டச் சேறலை எடுத்தியம்புவது. விலை அணு 2.

### திருக்குறள் விருத்தியுண் முதற்குறள் விருத்தியுரை

(அரசஞ்சண்முகனுர் உரை) கற்றல் கேட்டலுடைய நுண்ணுணர்வாளர்க்குறுதுணை யாகியது. விலை அணு 5.

### முருகக்கடவுள், திருவருண் மாலை

நூறு பாடல்களுள்ளது. இது, அன்பின்சுவையொழுகும் உருக்கமுள்ள பாடல்களால் ஆகியது, அன்பர்கள் வேண்டற்பாலது. விலை அணு 2.

### முருகக்கடவுள் வாழ்த்துத் திருவகவல்

இதனை, முருகக்கடவுள் திருத்தலவாழ்த்துத் திருவகவல் எனவும் வழங்குதலுமுண்டு. இது திருப்பரங்குன்றம் முதலாகப் பழமுதிர்சோலைமலை யீறாகப் பிரணவாகாரமாய்ப் பாண்டி, ஈழம், மலைநாடு, கொங்கு, நடுநாடு, தொண்டநாடு, சோணுடு, துவராபதி நாடு ஆகியவைகளை முறையாய்க் கொண்ட நூற்றெட்டுத் தலங்களைக் கொண்டுள்ள முருகபிரானை, அன்பு ததும்ப வாழ்த்திய அகவற் பாவாலாகிய நூல். ஸ்தலமார்க்க முதலிய தெளியக்கூறும் குறிப்புரையுடன் விலை அணு 2.

இவை, மதுரைப் புஸ்தகக் கடைகளிலும் அடியிற்கண்டுள்ள விலாஸத்திலும் கிடைக்கும்.

ம. சுந்தரபாண்டிய ஓதுவார்

ஓதுவார் சந்து; கீழச்சித்திரைவீதி, மதுரை.